

# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600004

## பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் ஜயந்தி விழாவும், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் 80ஆம் ஆண்டு நிறைவு விழாவும்

### 10—3—79 முதல் 16—3—79 வரை நிகழ்ச்சி நிரல்.

| | |
|---|---|
| 10-3-79 சனி | பிரார்த்தனை: மடத்தைச் சேர்ந்த சாதுக்கள் |
| மாலை 5 மணி முதல் 6-30 மணி வரை | வரவேற்புரை: சுவாமி தபஸ்யானந்தர்<br>தலைவர்: சுவாமி லோகேச்வரானந்தர்<br>சொற்பொழிவாளர்: டாக்டர் பிரபு சங்கர்<br>பொருள்: தொண்டின் இலட்சியம் |
| மாலை 6-30 மணி முதல் இரவு 8 மணி வரை | பக்திப் பாடல்கள்: நிகழ்த்துபவர்: திரு எம். ஓ. ஸ்ரீனிவாசன், தேசாஞ்சலி இசைக் குழுவினர். |
| 11-3-79 ஞாயிறு | ஸ்ரீ ராமகிருஷ்ணர் தினம் |
| மாலை 4-30 மணி முதல் 6-30 மணி வரை | வரவேற்புரை: சுவாமி தபஸ்யானந்தர்<br>தலைவர்: மாண்புமிகு தமிழக ஆளுநர் திரு பிரபுதாஸ் பட்வாரி அவர்கள்<br>பேசுவோர்: 1. சுவாமி லோகேச்வரானந்தர்<br>2. சுவாமி சர்வக்ஞானந்தர்<br>பொருள்: பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும் |
| மாலை 6-30 மணி முதல் இரவு 8 மணி வரை | மஞ்சக்குடி திரு ராஜகோபால சாஸ்திரி அவர்கள் 'விபீஷண சரணாகதி' என்னும் தலைப்பில் ஹரிகதா காலட்சேபம் நிகழ்த்துவார்கள் |
| 12-3-79 திங்கள் | அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் தினம் |
| மாலை 6 மணி முதல் 6-30 மணி வரை | பக்திப் பாடல்கள்: நிகழ்த்துபவர்: சுவாமி புருஷோத்தமானந்தர் |
| மாலை 6-30 மணி முதல் இரவு 8 மணி வரை | வரவேற்புரை: சுவாமி தபஸ்யானந்தர்<br>தலைவர்: சுவாமி லோகேச்வரானந்தர்<br>சொற்பொழிவாளர்: திருமதி இந்திரா சோமசுந்தரம்<br>பொருள்: அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் வாழ்வும் வாக்கும் |
| 13-3-79 செவ்வாய் | சுவாமி விவேகானந்தர் தினம் |
| மாலை 5-30 மணி முதல் இரவு 7 மணி வரை | வரவேற்புரை: சுவாமி தபஸ்யானந்தர்<br>தலைவர்: சுவாமி லோகேஷ்வரானந்தர்<br>சொற்பொழிவாளர்: திரு நா. கிரிதாரி பிரசாத்<br>பொருள்: சுவாமி விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும் |
| இரவு 7 மணி முதல் 8-30 மணி வரை | மதுரை சோமு அவர்கள் பக்திப் பாடல்கள் பாடுவார்கள் |
| 14-3-79 புதன் | சொற்பொழிவாளர்: திரு நா. கிரிதாரி பிரசாத் |
| மாலை 6 மணி முதல் இரவு 7-30 மணி வரை | பொருள்: வடலூர் வள்ளலார் |
| இரவு 7-30 முதல் 8-30 மணி வரை | சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மாணவரில்லத்தைச் சேர்ந்த மாணவர்கள் 'இந்திய நடனங்கள்' நடன நிகழ்ச்சியை நடத்துவார்கள் |
| 15-3-79 வியாழன் | சொற்பொழிவாளர்: திரு நா. கிரிதாரி பிரசாத் |
| மாலை 6 மணி முதல் இரவு 7-30 மணி வரை | பொருள்: திருவாசகம் |
| இரவு 7-30 மணி முதல் 8-30 மணி வரை | திரைப்படம்: பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்<br>விளக்குபவர்: சுவாமி சர்வக்ஞானந்தர் |
| 16-3-79 வெள்ளி | சொற்பொழிவாளர்: திரு நா. கிரிதாரி பிரசாத் |
| மாலை 6 மணி முதல் இரவு 7-30 மணி வரை | பொருள்: தானவீரன் கர்ணன் |
| இரவு 7-30 மணி முதல் 9 மணி வரை | கொத்தமங்கலம் திரு விச்வநாதன் அவர்களால் 'பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்' என்னும் தலைப்பில் வில்லுப் பாட்டுக் கலை நிகழ்ச்சி நடத்தப்பெறும். |

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—59 | மார்ச் 1979 | இதழ்—3

பொருளடக்கம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்


| தொகுதி 59 | காளயுக்தி ஹூ பங்குனி மீ | இதழ் 3 |
|---|---|---|








निराकारं निराधारं निर्विकारं निरामयम् ।
निर्द्वन्द्वं च निरालम्बं वन्दे गुहमुमासुतम् ॥

நிராகாரம் நிராதாரம் நிர்விகாரம் நிராமயம் |
நிர்த்வந்த்வம் ச நிராலம்பம் வந்தே குஹம் உமாஸுதம் ||

—குஹபஞ்சரத்னம்

உருவம் இல்லாதவரும், ஆதாரம் இல்லாதவரும், விகாரம் இல்லாதவரும், அழிவு இல்லாதவரும், இரண்டில்லாமல் (ஏகமாக) உள்ளவரும், பிடிப்பு இல்லாதவரும், உமா தேவியின் புதல்வருமாகிய முருகப்பெருமானை வணங்குகிறேன்.

ஆறு இரு தடந்தோள் வாழ்க
ஆறுமுகம் வாழ்க; வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க; செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க
மாறு இலா வள்ளி வாழ்க
வாழ்கசீர் அடியார் எல்லாம்.

—கச்சியப்பர் (கந்த புராணம்)



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, மார்ச் 11, 1883**

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** (கோசுவாமியிடம்): இறைவனிடம் உண்மையான ஈடுபாடு இருக்குமானல் எல்லா மதங்களின் மூலமாகவும் இறைவனை அடையலாம். வைணவர்களும் பகவானை அடைவார்கள், சாக்தர்களும் அடைவார்கள், வேதாந்திகளும் அடைவார்கள், பிரம்ம சமாஜத்தவர்களும் அடைவார்கள். அவர்களைப் போலவே முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் பகவானை அடைவார்கள். அந்தரங்க சிரத்தை இருக்குமானல் எல்லோரும் ஆண்டவனை அடைவது நிச்சயம்.

ஆனல் சிலர் மதத்தின் பெயரால் சச்சரவு செய்கின்றனர். 'எங்களுடைய ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினலன்றி ஒருவனுக்கு எதுவும் கிடைக்காது' என்றோ, 'எங்களுடைய அன்னை காளியை வணங்காவிட்டால் எதையும் அடைய முடியாது' என்றோ, 'எங்களுடைய கிறிஸ்தவ மதத்தைப் பின்பற்றாவிட்டால் எவனுமே கடைத்தேற முடியாது' என்றோ அவர்கள் கூறுகிறார்கள்.

இது வெறும் மதவெறியே ஆகும். அதாவது 'என் மதம் மட்டும் தான் உண்மை, மற்றவர்களின் மதம் பொய்யானது' என்று மதவெறியன் சொல்வான். இவ்விதம் நினைப்பது கெட்ட மனநிலை. இறைவனைப் பலவேறு பாதைகளால் அடைய முடியும்.

மேலும், 'பகவான் உருவமுள்ளவர், அவர் உருவம் இல்லாதவர் அல்ல' என்றும் சிலர் சொல்கிறார்கள். இவ்விதம் கூறுவதன்மூலம் மீண்டும் அவர்கள் சண்டையிட ஆரம்பிக்கின்றனர். ஒரு வைணவர் ஒரு வேதாந்தியோடு சண்டையிடுகிறார்.

பகவானைச் சாட்சாத்கரித்த பிறகுதான் அவரைப் பற்றிச் சரியாகப் பேச முடியும். அவ்விதம் இறைவனைச் சாட்சாத்கரித்தவனுக்கு, இறைவன் உருவமும் ஆவார், அருவமும் ஆவார் என்பது நன்ருகத் தெரியும். மேலும், வர்ணிக்கவே இயலாத எத்தனை எத்தனையோ பல நிலைகளும் அவருக்கு உள்ளன என்பதையும் அவன் அறிவான்.

ஒரு நாள் சில குருடர்கள் ஓர் யானையிடம் சென்றார்கள். யாரோ ஒருவன் 'இந்த மிருகத்தின் பெயர் யானை' என்று அவர்களிடம் தெரிவித்தான். பிறகு அவன், 'இந்த யானை எப்படி இருக்கிறது?' என்று குருடர்களிடம் கேட்டான். குருடர்கள் யானையின் உடலைத் தொட்டுப் பார்க்க ஆரம்பித்தார்கள். குருடர்களில் ஒருவன், 'யானை ஒரு தூணைப் போல இருக்கிறது' என்றான். அவன் யானையின் காலை மட்டுமே தொட்டவன். இன்னொரு குருடன், 'யானை ஒரு முறம் போன்றது' என்று சொன்னன். அவன் அதன் காதை மட்டுமே தொட்டிருந்தான். இது போலவே மற்றக் குருடர்களும் துதிக்கையையோ வயிற்றையோ தொட்டுப் பார்த்துவிட்டு அதைப் பற்றித் தாங்கள் அறிந்தபடியே பலவிதமாகப் பேசினார்கள். கடவுளைப் பற்றிய விஷயமும் இதுபோன்றதுதான். யார் யார் எவ்வளவு தூரம் புரிந்துகொண்டிருக்கிறார்களோ அதற்கு ஏற்றபடி, 'பகவான் இப்படிப்பட்டவர்தாம். வேறு எப்படிப்பட்டவராகவும் அவர் இருக்க முடியாது' என்று நினைத்துக் கொள்கிறார்கள்.

ஒருவன் வெளியே சென்று திரும்பியதும் 'மரத்தடியில் அழகான சிவப்பு நிறமுள்ள ஓர் ஓணானைப் பார்த்தேன்' என்று சொன்னன். வேறொருவனே, 'நான் உனக்கும் முன்னல் அந்த மரத்தடிக்குச் சென்றிருந்தேன். அந்தப் பிராணி சிவப்பு நிறமாகவா இருக்கிறது! பச்சை நிறமாக அல்லவா

இருந்தது? பச்சை நிறத்தில் இருப்பதை நானே என் கண்ணுல் பார்த்தேனே!' என்று தெரிவித்தான். மற்ரெருவன், 'எனக்கு நன்ருகத் தெரியும். உங்களுக்கெல்லாம் முன்னதாகவே நான் அங்கே சென்று வந்தவன். அந்த ஓணுனை நானும் பார்த்தேன். அது சிவப்பாகவும் இல்லை, பச்சையாகவும் இல்லை. அது நீலநிறமாக இருந்ததை நானே என் கண்ணுல் பார்த்தேன்' என்று சொன்னுன். மேலும் அங்கிருந்த இருவர், 'அது மஞ்சள் நிறத்தில் இருந்தது', 'கறுப்பு நிறத்தில் இருந்தது' என்றும் கூறினர்.

இது போலவே பலரும், அந்தப் பிராணி பலவேறு நிறங்களில் இருந்ததைக் கண்டதாகக் குறிப்பிட்டனர். முடிவில் அவர்களுக்கிடையே சச்சரவு எழுந்தது. 'நான் எதைப் பார்த்தேனே அதுதான் சரியானது' என்று ஒவ்வொருவருமே நினைத்தார்கள். அவர்களுடைய சண்டை சச்சரவுகளை ஒருவன் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் அவர்களிடம், 'உங்களுடைய சச்சரவுகளுக்கு என்ன காரணம்?' என்று விசாரித்தான். அவர்கள் சொன்ன விவரங்களை அவன் கேட்டுவிட்டு, 'நான் இந்த மரத்தின் அடியிலேயே தங்கியிருக்கிறேன். நீங்கள் அனைவரும் குறிப்பிடும் பிராணியை நான் மிகவும் நன்ருக அறிவேன். நீங்கள் ஒவ்வொருவரும் என்ன என்ன நிறங்களைக் கூறினீர்களோ அவை எல்லாமே உண்மைதான். இந்த ஓணுன் ஒரு சமயம் பச்சை நிறத்தில் இருக்கிறது, மற்ரெரு சமயம் நீலநிறத்தில் இருக்கிறது. இதைப் போல அது பலவேறு சமயங்களில் பலவேறு நிறங்களுடன் தோன்றுகிறது. மற்றும் சில நேரங்களில் அது எந்த நிறமும் இல்லாமல் இருப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். நிர்க்குணமாக இருக்கிறது!' என்று சொல்லி விளக்கினுன்.

(கோசுவாமியிடம்): பகவான் உருவம் கொண்டவர் என்பது மட்டுமே அவரைப் பற்றிய ஒரே உண்மை என்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்? அவர் மனித வடிவம் தாங்கி இந்த உலகில் ஸ்ரீகிருஷ்ணரைப் போல அவதரிக்கிருர் என்பது உண்மைதான். அவர் பற்பல உருவம் தாங்கித் தம் பக்தர்களுக்குக் காட்சி தருகிருர் என்பதும் உண்மைதான். ஆனுல் அதே சமயம் அவர் உருவமற்றவர் (நிராகாரம்), அகண்ட சச்சிதானந்தமாக விளங்குகிருர் என்பதும் உண்மைதான். வேதங்கள் அவரை உருவமற்றவர், உருவமுள்ளவர் என்ற இரண்டு விதங்களிலும் கூறியுள்ளன. சகுணமாகவும் நிர்க்குணமாகவும் அவர் இருப்பதாக அவை பேசுகின்றன.

இது எப்படி என்று தெரியுமா? சச்சிதானந்தம் என்பது எல்லையற்ற மிகப் பெரிய கடலைப் போன்றது. குளிர்ச்சி காரணமாகக் கடலின் நீர் பனிக்கட்டியாக உறைந்து போகிறது. பல உருவங்களோடு பனிக்கட்டிகள் கடல்நீரில் மிதக்கின்றன. அது போலவே பக்தி என்னும் குளிர்ச்சி காரணமாகவே சச்சிதானந்தக் கடலில் உருவக் கடவுளின் தோற்றம் எழுகிறது. பக்தர்களின் பொருட்டே கடவுள் இவ்விதம் உருவம் தாங்குகிருர். ஞானமாகிய சூரியன் உதிக்கும்போது மீண்டும் பனிக்கட்டி உருகிவிடுகிறது. முன்பு தண்ணீராக இருந்தது மீண்டும் தண்ணீராக ஆகிவிடுகிறது பிறகு எங்கே பார்த்தாலும் ஒரே தண்ணீர்மயம்!

ஆகவேதான், 'பிரபுவே, தாங்கள் உருவம் கொண்டவர், அதோடு உருவம் இல்லாதவராகவும் திகழ்கிறீர்கள். தாங்கள் மனித வடிவம் தரித்து எங்கள் முன்பு நடக்கிறீர்கள். மேலும், வேதம் தங்களை வாக்கிற்கும் மனதிற்கும் அப்பாற்பட்டு விளங்குபவர் என்று கூறுகிறது' என்று ஸ்ரீமத் பாகவதத்தில் ஒரு பிரார்த்தனை சொல்லப்பட்டிருக்கிறது

ஆனுல் சில பக்தர்களின் விஷயத்தில் இறைவன் எப்போதுமே உருவம் கொண்டவராக, நித்திய சாகாரமாகவே இருக்கிருரே என்று கேட்கலாம். சில இடங்கள் இருக்கின்றன; அங்கே பனிக்கட்டி உருகுவதே இல்லை. அங்கு ஸ்படிகம் போன்ற உருவத்துடன் பனிக்கட்டி இருக்கும்.

கேதார்: வியாசர் தாம் இழைத்த மூன்று குற்றங்களுக்காகப் பகவானிடம் மன்னிப்புக் கேட்டுப் பிரார்த்தித்ததாக ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. அந்தப் பிரார்த்தனையாவது: 'பிரபுவே, நீர் உருவம் இல்லாதவர்; ஆனுல் எனது தியானத்தில் உம்மை உருவத்தோடு கூடியவராகப் பாவித்திருக்கிறேன். நீர் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவர்; ஆனுல் நானே உம்மீது தோத்திரங்கள் பாடியுள்ளேன். நீர் எங்கும் பரந்திருப்பவர்; ஆனுல் நானே பல தலங்களுக்கும் யாத்திரை செய்திருக்கிறேன். என்மீது கருணை கூர்ந்து, என் தோஷங்களாகிய இம் மூன்றையும் மன்னித்தருள்வீராக!'

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஆம், கடவுள் உருவம் உடையவர். மேலும், அவர் உருவம் இல்லாதவரும் ஆவர். அது மட்டுமின்றி அவர் உருவம் அருவம் இரண்டையும் கடந்தவரும் ஆவார். அவர் இப்படிப்பட்டவர்தாம் என்று யாரும் அவருக்கு எல்லை கட்டிச் சொல்ல முடியாது.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** (ராக்காலின் தந்தையையும் மற்றப் பக்தர்களையும் பார்த்து): ஆகா! இப்போதெல்லாம் ராக்காலின் இயல்பு எப்படி இருக்கிறது தெரியுமா? அவனுடைய முகத்தைப் பாருங்கள்! மீண்டும் மீண்டும் அவனுடைய உதடுகள் அசைவதைக் காண்பீர்கள். உள்ளுக்குள்ளேயே பகவானின் நாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கிறான். அது காரணமாகவே அவன் உதடுகள் அசைந்தபடி இருக்கின்றன.

ராக்காலைப் போன்ற இந்தப் பையன்கள் அனைவரும் நித்திய சித்தர் என்ற ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பிறக்கும்போதே இறைவனைப் பற்றிய ஞானத்துடன் பிறக்கிறார்கள். கொஞ்சம் வளர்ந்தவுடனேயே அவர்கள், சம்சாரத்தில் சிக்கிக் கொண்டால் தப்பவே வழியில்லை என்பதை நன்றாக அறிந்துகொண்டுவிடுகிறார்கள். வேதத்தில் ஹோமா என்ற பறவையைப் பற்றிச் சொல்லப் பட்டுள்ளது. அந்தப் பறவை வெகு தூரத்தில் ஆகாயத்திலேயே இருக்குமாம். தரைக்கு அது ஒரு போதும் வருவதே இல்லை. ஆகாயத்திலேயே முட்டையும் இடுகிறது. முட்டை தரையை நோக்கி விழ ஆரம்பிக்கும். ஆனால் தாய்ப்பறவை ஆகாயத்தில் மிகவும் அதிக உயரத்தில் வாழ்வதனால், முட்டை கீழே விழும்போதே குஞ்சு பொரித்துவிடுகிறது. அப்போது முட்டையைத் திறந்துகொண்டு குஞ்சு வெளியே வரும். அந்தக் குஞ்சும் பல நாட்களாகத் தரையை நோக்கிக் கீழே வந்துகொண்டிருக்கும். ஆனால் ஆகாயத்தில் மிக உயரத்திலேயே இதெல்லாம் நிகழ்வதனால், குஞ்சுப்பறவை கீழே வந்துகொண்டிருக்கும்போதே அதற்கு இறக்கை முளைக்கிறது. கண் திறந்துகொள்கிறது. 'நான் தரையை நோக்கி அல்லவா கீழே விழுந்துகொண்டிருக்கிறேன்! தரையின்மீது மோதினால் எனக்கு மரணம் நிச்சயம்!' என்று அது அறிந்துகொள்கிறது. தரையைக் கண்டதுமே தன் தாய் இருக்கும் இடத்தை நோக்கி மேல்நோக்கிக் கிளம்பிவிடுகிறது. ஒரேயடியாக மேலேயே பறந்து செல்ல ஆரம்பிக்கிறது. தாய்ப்பறவை இருக்கும் இடத்தை மீண்டும் சென்றடைய முயல்கிறது. அன்னையிடம் திரும்பிச் செல்வது ஒன்றேதான் அதன் ஒரே இலட்சியமாக விளங்குகிறது.

ராக்காலைப் போன்ற இந்தப் பையன்கள் அனைவரும் அந்தப் பறவையைப் போன்றவர்கள். சிறிய வயது முதற்கொண்டே சம்சாரத்தில் சிக்கிக் கொண்டுவிடுவோமோ என்று நினைத்து, அவர்கள் அஞ்சுகிறார்கள். எப்படி ஜகன்மாதாவைச் சென்றடைவோம், எப்படிக் கடவுளைச் சாட்சாத்கரிப்போம் என்ற ஒரே ஒரு சிந்தனை மட்டுமே அவர்களிடம் மேலோங்கி நிற்கிறது.

உலகப்பற்றுக் கொண்டவர்களிடையே பிறந்தும் அவர்களிடையே வாழ்ந்தும் வந்தபோதிலுங்கூட, இந்தப் பையன்கள் எப்படி இத்தகைய உயர்ந்த பக்தியையும் ஞானத்தையும் கொண்டிருக்க முடியும் என்று நீ கேட்கலாம். அதற்கு விளக்கம் இருக்கிறது. சாணக் குவியலில் அவரை விதை விழுந்தால் அவரைக் கொடிதானே முளைக்கும்? அந்த விதையிலிருந்து எவ்வளவு அழகிய கொடி வெளிவருகிறது! அவரைவிதை சாணக் குவியலில் விழுந்துவிட்டதனால் வேறு ஏதாவது கொடி முளைத்துவிடுமா என்ன?

---



உழைப்பு சன்மானம் பெறுவதற்கு என்று நினைத்தால், அந்த உழைப்பு கடினம் போலத் தோன்றும்.

—டால்ஸ்டாய்

ஒவ்வோர் உயிரும் தான் பிறவி எடுக்க நேர்ந்த கர்மங்களையே அனுபவித்துக் கழிக்க வேண்டும். மேலும் மேலும் வினைகள் வந்து சேரும்படி மனம் செல்லும்போது தடுத்து ஆட்கொள்ள வேண்டுமென்று ஆண்டவனை வணங்கி வரம் பெறுதல் வேண்டும்.

—சேக்கிழார்

ஒருவன், கடவுள் பிதிரர் விருந்தினர் ஆகிய இவர்களுக்கு அன்னம் கொடாமல் ஒருபோதும் தான் உண்ணலாகாது. எவன் அறியாமையால் தன் பொருட்டு அடிசில் (உணவு) ஆக்குகிறானே அவன் பின்னர் நரகத்தில் ஆளாதற்பொருட்டு உயிர் வாழ்பவனாவான்.

—சுக்கிரநீதி




# துளசி ராமாயணம்

**ரா**மனின் கதை பாரதத்திற்குப் புதிய கதை யன்று. இந்தியாவின் வரலாறு படைக்கப்பட்ட காலத்திற்கும் முன்பே ராமாயணம் பரதகண்டம் முழுவதும் பரவியிருந்திருக்கிறது. இத்தகைய பெருமை வாய்ந்த ராமாயணத்தின் மூலக்கதையைக் காப்பிய உருவில் அளித்தவர் வால்மீகி.

வால்மீகியின் நூலை அடிப்படையாகக் கொண்டு இதுவரை எத்தனை ராமகதைகள் இயற்றப் பட்டிருக்கின்றன! ஆனந்த ராமாயணம், புசுண்டி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம் போன்ற பல நூல்கள் தோன்றியுள்ளன. இந்த நூல்களில் இல்லாத என்ன புதுமைக்காகத் துளசிதாசர் ராம சரித மானஸை இயற்றினார் என்பதை ஆராய்வோம்.

துளசிதாசருக்குத் தமது நூலின் வாயிலாக எந்த விதப் புதிய கருத்தையும் வெளியிட வேண்டும் என்ற எண்ணம் கிடையாது. அப்படியானால் மறு படியும் ஏன் புதிதாக ஒரு ராமாயணம் எழுத வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா? துளசிதாசரின் மனதில் ராமாயணம் எத்தகைய அமைதியையும் பேரின்பத்தையும் அளித்ததோ அதை ஒவ்வொரு பாமர மனிதனும் அனுபவிக்க வேண்டும்; தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்ற ஒரே உயர்ந்த குறிக்கோள்தான் 'ராமசரித மானஸ்' என்ற அரிய படைப்பிற்கு அஸ்திவாரமாக அமைந்தது.

அந்தக் காலத்தில் வால்மீகி ராமாயணம் சம்ஸ் கிருத மொழியில் புலமை பெற்றவர்கள் மட்டுமே படித்து அனுபவிக்கக்கூடிய ஒன்றாக விளங்கியது. எனவே பாமர மக்களும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற அடிப்படைக் கருத்துடன் துளசி தாசர் வட இந்தியாவின் பழகுமொழியான அவதி மொழியில் தமது காப்பியத்தை வடித்தார்.

துளசிதாசர் வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பாகத் தம் நூலை அமைக்கவில்லை. குறை கூறுபவர்கள் எது வேண்டுமானாலும் சொல்லலாம். அனைத்து ராமகதைக்கும் ஆதாரமாகிய வால்மீகி ராமாயணம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. ஆனால் துளசிதாசர் தமது நூலில் வரலாற்றுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கவில்லை. அதில் அவர் பாவத்திற்குத்தான் (இதய நெகிழ்ச்சி, பக்தி மன நிலை) அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்.

அப்படித் துளசிதாசரின் ராமர் எந்த விதத்தில் உயர்ந்தவர் என்ற கேள்வி எழக்கூடும். வால்மீகி தம் ராமகதையில் ராமபிரானைப் பிரம்மம் என்று ஒப்புக்கொண்டபிறகும் அவரை ஒரு சாதாரண மனிதனைப் போன்ற குணங்களையுடையவராகக் காட்டியிருக்கிறார். ஆனால் துளசிதாசரின் ராமர் அசல் பரப்பிரம்மமயமாகவே காட்சியளிக் கிறார். அதில் மனிதன் செய்யக்கூடிய அறியாமை யால் ஏற்படும் தவறுகளுக்கு இடமே கிடையாது. வண்ணான் காரணமாகச் சீதையைக் கைவிட்ட வரலாறு துளசி ராமாயணத்தில் இல்லை.

வால்மீகியின் கதையில் ராமர் பிறந்த காலம், இடம், பெற்றோர் பற்றிய விஷயங்களுக்கு முதலிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் துளசியின் ராமர் பக்திக்கே கட்டுப்பட்டவர். அதாவது அவரது நூலின் கருப்பொருள் இறையருள் நிரம்பியது. இது ஒன்றுதான் இந்த இரண்டு ராமகதைகளுக்கும் உள்ள முக்கியமான வேற்றுமை.

சிலர், "துளசிதாசரின் ராமர் கடவுள்தன்மை வாய்ந்தவர்; எனவே அவரைச் சாதாரண மனிதன் அணுக முடியாது. ஆனால் வால்மீகியின் ராமர் மனிதர்களுள் ஒருவராகக் கருதப்படுகிறார்; ஆகவே மனிதன் அவரைத் தன்னில் ஒருவராக நினைத்து அருகில் செல்லலாமே?" என்று கேட்கலாம். அதற்குத் துளசிதாசர் கூறும் பதில் இதுதான் : "வால்மீகியின் ராமர் காலத்தால் பழமையாகித் தற்கால மக்களைவிட நீண்ட காலத்திற்கு முற்பட்டவராகி வெகு தொலைவில் சென்றுவிடுகிறார். ஆனால் என் ராமர் பாவம் நிறைந்தவர். அதனால் மனிதனுக்கு மிகவும் அருகில் வந்துவிடுகிறார்; ஏன், அவரவர் இதயத்தில் வந்து தங்கிவிடுகிறார். எனவே என் ராமரை அனைவரும் ஆராதிக்கலாம், பக்தி செய்யலாம்."

அதை விளக்கும் வகையில் துளசி ஒரு காட்சியைத் தருகிறார்:—இலங்கையிலிருந்து புஷ்பக விமானத்தில் ராமர் திரும்பி வருகிறார். மக்கள் அனைவரும் அவரது வருகையை ஆவலுடன் எதிர்நோக்கி வழிமேல் விழிவைத்துக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். வரலாற்று அடிப்படையில் எழுதப்படும் ராமர் எல்லா மக்களையும் சந்திக்க முடியாது. ஆனால் துளசியின் ராமர் அன்புடன் தம்மை எதிர்நோக்கி நிற்கும் ஒவ்வொருவரையும் வந்து விசாரித்து அவர்களின் மனதிற்கு மகிழ்ச்சியை அளிக்கிறார். ராமரைப் பார்க்க விரும்பியவர்கள் அவரைக் கண்டவுடன் மிகுந்த மனநிறைவு பெறுகிறார்கள். ஏதேனும் ஒன்று நடக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் ராமரைத் தரிசித்தவர்கள் தங்கள் எண்ணம் நிறைவேறுவதைக் காண்கிறார்கள். அன்புப் பெருக்கோடு வந்துள்ள லட்சக்கணக்கான மக்களை மகிழ்விக்க இராமபிரான் லட்சக்கணக்கான உருவம் எடுக்கிறார். ஒவ்வொருவரும் தம்மிடம் மட்டுமே ராமர் பிரத்தியேக அன்புடன் இருப்பதாக நினைக்கும் அளவிற்குத் துளசியின் ராமர் பழகுகிறார். வயோதிகர்களை மதித்து மரியாதை செய்கிறார். ஆசிரியர்களைக் கண்டு வணங்குகிறார். அன்னையரைப் போற்றித் துதிக்கிறார். இப்படிச் செய்யும் ராமரை அனைவரும், 'என்னிடம்தான் ராமர் பேசினார், என்னைத்தான் பார்த்தார்' என்று சொல்லும் அளவிற்குப் பேரன்பு கொண்டவர் துளசியின் ராமர்.

கவித்வம் மிக்க இலக்கியப் படைப்புகளினால் மட்டுமே மனிதனிடம் சிறந்த எண்ணங்களைத் தோற்றுவிக்க இயலாது. அறிவின் உதவியால் சிந்திக்க வேண்டும். இதயத்தில் நல்ல எண்ணங்கள் தோன்ற வேண்டும். பௌர்ணமியன்று சந்திரன் எவ்வளவு அழகாகக் காட்சி தருகிறான்! நாம் அதைத்தான் பார்க்க வேண்டும். சந்திரன் தேய்வதைப் பற்றிச் சிந்தித்தால் சந்திரனிடம் உள்ள குறைதான் நமக்குப் படும்.

ஓர் அழகான குழந்தையின் எக்ஸ்-ரே படத்தை எடுத்துக்கொண்டு போய் அதன் தாயினிடம் காட்டி, "இதுதான் உன் அழகான குழந்தையின் உண்மையான தோற்றம்" என்று சொல்வதாக வைத்துக் கொள்வோம். அப்போது அந்தத் தாயின் இதயம் எத்தனை சுக்கல்களாக உடையும்? என்றாலும் அவளது இதயத்திற்குத் தன் குழந்தையின் அழகு தெரியும். இதயத்திற்கு மிகவும் நீண்ட தூரம் செல்லக்கூடிய சக்தி உண்டு. ஆனால் அறிவுக்கு இதயத்தைப் போல நீண்ட தூரம் செல்லக்கூடிய ஆற்றல் கிடையாது.



வரலாறு என்பது ஒரு கதையைப் பிரேதப் பரிசோதனை செய்வதைப் போலத் தனித்தனிப் பிரிவுகளாகப் பிரித்து அலசி ஆராய்வது. இது இந்தக் காலத்தைச் சேர்ந்தது. இந்த நூலின் நாயகர் பிறந்த தேதி, மரணம் அடைந்த நேரம் ஆகியவை இவை என்ற ரீதியில் பல தகவல்களைத் தருகிறது. இந்த நிலையைத்தான் வால்மீகியின் கதையில் நாம் காண்கிறோம். ஆனால் துளசிதாசரோ தமது ராம கதைக்கு வரலாற்று முக்கியத்துவம் தரவில்லை. அவருடைய நூலில் பாவமே பிரதானமாக அமைந்திருப்பதால் அதைக் காலமோ இடமோ எதுவும் செய்ய முடியாத அமரநிலைக்கு உயர்ந்துவிடுகிறது.

பாகவதத்திற்கும் பாரதத்திற்கும் உள்ளவேற்றுமைதான் வால்மீகி ராமருக்கும் துளசி ராமருக்கும் உள்ள வேற்றுமை ஆகும். வால்மீகி ராமபிரானின் நடத்தையைப் புகழ்ந்திருக்கிறார். ஆனால் துளசிதாசரோ ராமபிரானின் லீலைகளைப் புகழ்ந்திருக்கிறார். பாரதத்தைப் பற்றிச் சொல்லும்போது அதில் கூறப்பட்டுள்ள விஷயங்களையே எல்லா நூல்களும் கூறுகின்றன என்றும் சொல்லப்படுகிறது. பாரதம், பாகவதம் ஆகிய இரண்டு புனித நூல்களுக்கும் கண்ணபிரானே நாயகராக விளங்குகிறார். அவற்றில் ஒரு

நூலைப் படிப்பதால் மனதிற்கு அசாந்தியும், மற்ளெரு நூலைப் படிப்பதால் சாந்தியும் ஏற்படுகின்றன.

பாகவதத்தில் பாவம்தான் பிரதானம். அதில் கண்ணனின் நற்குணங்கள் பாடப்பட்டுள்ளன. கோபியர் கண்ணனுடன் கலந்து விளையாடி மகிழ்ந்து மயிர்க்கூச்செறிகிருர்கள். அப்படி அவர்களது ரோமம் குத்திட்டு நிற்குமளவிற்கு அவர்கள் கண்ட காட்சிதான் என்ன? நிச்சயமாக அது தெய்விகப் பேரானந்தத்தை அளிக்க வல்ல காட்சியாகத்தான் இருந்திருக்க முடியும். எனவேதான் அவர்களின் மலர்விழிகளிலிருந்து ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பிரவகிக்கிறது. நந்தகோபனின் வீட்டுத் தாழ்வாரத்தில் வேதாந்த சித்தாந்தத்தின் திருவுருவமாகிய எம்பிரான் பிள்ளை உருவத்துடன், உடல் முழுவதும் தெருப்புழுதி நிரம்பப்பெற்று மாயச் சிரிப்புடன் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வகையில் நடனமாடுகிருர். இதையன்ருே கோபியர் கண்ணுரக் கண்டனர்? இதுவன்ருே பாவபக்தி! இதுபோலவேதான் துளசிதாசரின் ராமரும் பகவானுகக் காட்சி தருகிருரே தவிர, மனிதனுகக் காட்சி தரவில்லை.

வால்மீகியின் கதையை நாம் அனைவரும் அறிவோம். ரத்னுகரன் என்னும் கொள்ளைக்காரன் நாரதரைச் சந்தித்தான். அவருடைய உபதேசத்தால் மனம் திருந்தி ராம என்பதன் தலைகீழ்ப் பெயரான 'மரா' என்ற மந்திர ஜபத்தைப் பெற்று, ஆழ்ந்த தியானம் பயின்ருன்; அவன்மீது புற்று வளர்ந்தது; பிறகு வால்மீகியாக அருள்பெற்று நாரதரின் மூலம் ராமகதையை அறிந்து அதை எழுதுகிருர். அவர் ராமர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிருர். என்ருலும் அவர் ராமரின் அருகில் செல்வதில்லை.

ஆனுல் துளசிதாசர், ராமர் பிறக்கும்போது தாமும் அங்கு இருந்த மக்களுடன் காணப்படுகிருர். அவர்களுடன் துளசிதாசரும் சேர்ந்துகொண்டு ராமரின் லீலைகளைப் பாடுகிருர். எல்லாக் காலங்களிலும் துளசிதாசரும் ராமருடன் கூடவே வாழ்கிருர். ராமர் என்ருல், அவர் திரேதாயுகத்திற்கு மட்டும் சொந்தமானவர் என்னும் கருத்து துளசி ராமாயணத்தில் கிடையாது. அது எப்படி என்று விளக்கும்படி யாரோ ஒருவர் கேட்பதாகவும் அதற்குத் துளசிதாசர் பதில் கூறுவதாகவும் துளசிதாசரே ஒரு கற்பனை நிகழ்ச்சியைக் காட்டுகிருர்:—

ஒருவர்: ஏனய்யா? நீர் ராமரைப் பார்த்ததுண்டா? பிரமாதமாக உமது நூலில் வர்ணித்திருக்கிறீரே!

துளசி: ஓ! பார்த்திருக்கிறேனே! ஏன், அவருடன் விளையாடியுங்கூட இருக்கிறேன். ஒரு சமயம் விளையாட்டில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. அதில் ஒரு கட்சியின் தலைவன் ராமன். மற்ளெரு கட்சியின் தலைவன் பரதன்.

ஒருவர்: சரி; நீர் ராமர் கட்சியில்தானே சேர்ந்தீர்? அப்போதுதானே ஜயிக்க முடியும்?

துளசி: இல்லை, நான் பரதனின் கட்சியில் சேர்ந்தேன்.

ஒருவர்: ஏன், பரதன்மீதுதான் உமக்கு அன்பு அதிகமோ?

துளசி: ராமர் கட்சியில் சேர்ந்து விளையாடினுல் அவரது முகத்தைப் பார்க்க முடியாது. ஆனுல் பரதனேடு சேர்ந்து எதிர்த்தரப்பில் விளையாடினுல் எப்போதும் பகவானைத் தரிசிக்கலாம் அல்லவா?

ஒருவர்: ராமர்தாமே வெற்றி பெற்ருர்?

துளசி: இல்லை, பரதனுக்குத்தான் வெற்றி கிடைத்தது.

ஒருவர்: அது எப்படி?

துளசி: பரதன் மகா பக்தன். அவன் தன் பக்தியால் ராமரைப் பணிந்து வரம் பெற்றுவிட்டான். பிறகு பகவான் எப்படி வெற்றி அடைய முடியும்? பக்தனுக்குத்தானே வெற்றி!

இதுதான் துளசிதாசரின் கதையின் சிறப்பு. பாவத்தின் அடிப்படையில் பார்த்தால் அவருடைய ராமாயணத்திற்கு எத்தனையோ வகையில் பொருள் கூறலாம். எவ்வளவோ ராமாயணங்கள் இருக்கின்றன. 'ஹரி அனந்த், ஹரிகதா அனந்த்' என்று சொல்லப்படுகிறது. யார் யார் எப்படி எப்படிக் கருதுகின்றனரோ அதற்கேற்பப் பகவானை அடைய முடியும். ஒவ்வொரு யுகத்திலும் பகவான் அவதாரம் செய்கிருர்.

குணங்கடந்த ராமரைத் துளசிதாசர் பூவுலகிற்கு வந்து அவதரிக்குமாறு அழைக்கிருர். வரலாற்றில் அவதாரத்திற்கு இடம் கிடையாது. துளசிதாசர் பெயர் இல்லாத ஒன்றுக்கு ஒலிவடிவத்தை அளித்திருக்கிருர்.

துளசிதாசர் ஏணிப் படிகளின் வழியாக இறைவனைப் பூவுலகிற்கு இறங்கி வருமாறு அழைக்

கிறர். ஏணி என்றால் அதன் மூலமாக ஏறி மேலே யும் செல்லலாம்; கீழேயும் இறங்கி வரலாம். துளசி தாசர் அமைத்துள்ள ஏணி 'ஆன்மிகச் சாதனை' என்று சொல்லக்கூடியது. அந்தச் சாதனைகளில் ஈடு படும் அன்பர்களிடம் வரும்படி பகவானைத் துளசி தாசர் அழைக்கிறர். துளசிதாசர் கூறுகிறர்:— "பிரபோ! நாங்கள் இந்தப் பூமியில் நிற்கிறோம். இங்குள்ள நாங்கள் அனைவரும் இந்த ஏணியின் வழி யாகத்தான் ஏறி வந்து தங்களை அடைய முடியும். தாங்கள்தாம் பெரிய அறிவாளி ஆயிற்றே! நான் கேட்கும் ஒரு கணித வினாவிற்குப் பதில் கூறுங்கள். இங்குள்ள மக்கள் அனைவரும் ஒவ்வொருவராக உங்களை வந்தடைய எவ்வளவு காலம் பிடிக்கும்? நாங்கள் எப்போது வந்து உங்களை அடையமுடி யும்? ஏன் மௌனமாக இருக்கிறீர்கள்? இந்த அற்பக் கணக்கிற்குக்கூடவா பதில் தர முடியவில்லை? எங்களுக்கு ஏன் இந்தத் தொல்லை? ஏணிப்படிகள் வழியாக நாங்கள் அனைவரும் ஏறி வருவதற்குப் பதிலாகத் தாங்கள் ஒருவர் கீழே இறங்கி வந்தால் எங்கள் அனைவரையும் உய்விக்கலாம் அல்லவா?"

இவ்விதம் துளசிதாசர் தமது பக்திபாவத்தினால் ராமபிரானைக் கூட்டிக்கொண்டு வந்து பாமரமக்கள் முன்பு நிறுத்திவிடுகிறர். ☆

---

*ராய்ப்பூர், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளையைச் சேர்ந்த சுவாமி ஆத்மானந்தர் நிகழ்த்திய ஆங்கிலச் சொற் பொழிவைத் தழுவி இந்த இதழின் விஜயதீபம் இடம் பெறுகிறது.

# இறைவா ஒரு விண்ணப்பம்

புலவர் கே. எஸ். ராசேந்திரன்

நீ அமைத்த நந்தவனத்தில் நானும் ஒரு மலர். உன் படைப்புக்களில் எல்லாம் நீ தான் மலர்ந் திருக்கின்றாய் என, ஞானம் பழுத்தவர் நாளும் கூறுகின்றனர். ஆனால், நான்—?

தோன்றுவன பார்க்கிறேன்; அழகை எல்லாம் காண்கிறேன்; படைப்பின் பெருமை கண்? வியப்புறுகிறேன். ஆயினும், நீ எங்கே இருக்கிறாய் என்றே தேடுகிறேன்.

ஆசைகளை வளர்த்துவிட்டேன். தேவைகளைப் பெருக விட்டேன். தேவைகளைத் தேடியே அலை கிறேன். ஓர் ஆசையின் தேவையினை நிறைவு செய்துவிட்டால் மேலும் ஒன்பது ஆசைகள் உயிர் பெறுகின்றனவே! எத்தனை கோடி இன்பங்களை நீ வைத்தால் என்ன? என் தேவைகள் கோடிக்குமேல் கோடியாக வளர்வதனால் பற்றுக்குறை தானே தெரிகிறது.

'ஆசை அறுமின் ஈசனோடாயினும் ஆசை அறுமின்' இது என் செவியில் விழும்போதே உன்னைப் பற்றுக்குறை புலப்படுகிறது.

ஆயிரமாயிரமாக அறிவு நூல்கள் கற்று என்ன பயன்? அறியாமைதானே மேலோங்குகிறது. என்னை நல்லவனாகவும் படைக்கவில்லை; முற்றிலும் தீயவனாகவும் படைக்கவில்லை; இடைப்பட்டவனாகவே இருந்து வருகிறேன். பெருந்தன்மை உடையவனாக வேண்டும் என்றே எண்ணுகிறேன். செயலள வில் வரும்போது கருமியாகி விடுகிறேன். ஏன்?

ஆசைகளை வளர்த்துவிட்டேன். தேவைகளைப் பெறுவதற்காக ஓடிக்கொண்டே இருக்கிறேன். ஓடும்போதுகூட உன் ஆயிரம் நாமங்களில் ஒன்றையேனும் சொல்லிக்கொண்டேதான் ஓடுகிறேன். உன் நாமத்தையும் மிஞ்சுகிறதே ஆசை எண்ணம்!

இறைவா!

நான் ஒரு கனவு கண்டேன். என்ன! சிரிக்கிறாயா? 'நான் அறியாத கனவா?' என்று தானே சிரிக்கிறாய்? சிரி சிரித்துக்கொண்டே எதனையும் வழங்குவாய். செயல் மீறும்போதும், உன் படைப்பின் எல்லை மீறும்போதும், சினம் கொண்டு அழிப்பாய்.

நான் நதியில் விழுந்து விட்டேன். அடித்துச் செல்கிறது நதி. வெள்ளத்தில் ஒரு மரக்கட்டை மிதந்து வருகிறது. வெள்ளப் பெருக்கெடுக்கச் செய்து வேதனை தந்தவனும் நீ; பற்றிக் கரையேற மரக் கட்டையாக வந்தவனும் நீதானே? மிதந்து வரும் கட்டையைப் பார்க்கிறேன். அந்தக் கட்டை காட்டு மரக்கட்டை. ஆற்றில் வெள்ளம். ஆபத்தான வேளை. அப்போதும் என் மனம், 'மிதக்கும் கட்டை சந்தனக்கட்டையாக இருக்கக்கூடாதா?' என்றே ஏங்குகிறது. உயிர் பிரியும் வேளையில் கூட ஆசைதான் மேலோங்குகிறது.

அன்பை வளர்த்து உன் அருகில் நெருங்காமல், ஆசையை மனதில் வளர்த்து உன்னை விட்டு வெகு தூரம் விலகி நிற்கும் எங்களைப் பார்த்தாயா?

தன் தேவைகளைத் தேடி அலைபவன் துயரப்படுவான். பிறர் தேவைகளுக்காகத் தன்னை வழங்குபவன் தெய்வமாகிறான்.

பிறர் தேவைகளுக்கு எங்களை வழங்காவிட்டாலும், எங்கள் தேவைக்காகப் பிறரை வருத்தாத மனதையாவது எங்களுக்கு வழங்கு ஆண்டவனே!

# சுவேதாச்வர உபநிஷதம்

'அண்ணு' சுப்ரமணியம்



[சென்ற இதழின் தொடர்ச்சி]

## 4

'ஆணும் நீயே, பெண்ணும் நீயே. குமரனும் நீயே, குமரியும் நீயே. கிழவனுகத் தடியூன்றித் தள்ளாடிச் செல்பவனும் நீயே. கரிய வண்டாகவும், பச்சைக் கிளியாகவும், மின்னலுடன் கூடிய மேக மாகவும், ருதுக்களாகவும், சமுத்திரங்களாகவும் நீயே இருக்கிருய். ஆதியற்றவனுய் எங்கும் நிறைந் தவனுய் நீ இருக்கிருய். 'உன்னிடமிருந்தே எல்லா உலகங்களும் தோன்றியுள்ளன' என்று ரிஷி எங்கும் நிறைந்த பரம்பொருளைப் போற்றுகிருர்.

சம்சாரபந்தத்தையும் முக்தியையும் பற்றிப் பேசும் போது சிலேடையாக ஜீவனைப்பற்றிப் பின்வருமாறு ரிஷி கூறுகிருர் : — (முக்குணங்களாகிய) வெளுப்பும் சிவப்பும் கறுப்பும் கலந்த வர்ணமுடைய (பிரகிருதி யாகிய) பெண் ஆட்டுடன் (கட்டுப்பட்ட புருஷ னுகிய) ஓர் ஆண் ஆடு கூடிப் பல குட்டிகளைப் பெறுகிறது. மற்ருேர் ஆண் ஆடு (முக்த புருஷன்) போகங்களை அனுபவித்த பிறகு பெண் ஆட்டை விட்டு விலகுகிறது.

மேலும் ஓர் உவமை கூறப்படுகிறது:-- அழகிய சிறகு படைத்த இரண்டு பறவைகள் இணைபிரியாமல் ஒரே மரத்தில் வசிக்கின்றன. அவற்றுள் ஒன்று, இனிப்பும் புளிப்புமாகிய பழங்களை உண்கிறது. மற்றதோ, உண்ணுமல் பார்த்துக்கொண்டிருக்கிறது. இரண்டு பறவைகளும் சமமான உறைவிடம் உடை யவை. என்ருலும், ஒன்று (ஜீவன்) தாழ்ந்த நிலை யடைந்து, மதிமயங்கித் திறமையற்றுத் துன்பப்படு கிறது. அது எப்போது ஏற்றமுள்ளதும் ஆளும் திறமை வாய்ந்ததுமாகிய மற்றப் பறவையைப் பார்க் கிறதோ அப்போது அந்தப் பறவையின் மகிமை தன்னுடையதே என்று கண்டு சோகம் நீங்கிய தாகிறது.

அழிவற்ற பரம்பொருளை எவன் அறியவில்லையோ அவன் வெறும் வேதமந்திரங்களால் மட்டும் என்ன செய்யப்போகிருன்? பரம்பொருளை அறிந்தவர்களே வாழ்க்கையின் பயனை எய்துகின்றனர்.

எவன் தேவர்களைச் சிருஷ்டிப்பவனே, எல்லா உலகங்களுக்கும் தலைவனே, துன்பங்களைத் துடைப்பவனே, தீர்க்கதர்சியோ, ஹிரண்யகர்ப்பன் பிறந்ததைப் பார்த்தவனே அவன் நமக்குச் சிறந்த புத்தியை அளிக்கட்டும்.

பாலில் உள்ள நெய்யைவிட மிகவும் சூட்சுமமாக எல்லா உயிர்களிலும் மறைந்திருக்கும் அவனை அறிந்து ஒருவன் எல்லாத் தளைகளிலிருந்தும் விடு படுகிருன்.

எப்போது அவித்தை நீங்குகிறதோ அப்போது பகலுமில்லை, இரவுமில்லை; உளதுமில்லை, இலது மில்லை; கேவல சிவம் மட்டும் அந்த நிலையில் உள் ளது. அந்தச் சிவனைக் கட்டிப்பிடித்தவர் எவரு மில்லை. அவனுக்குப் பிரதிமையாகவும் உவமை யாகவும் சமமாகவும் எதுவுமில்லை. அவனுடைய வடிவம் கண்ணெதிரில் நிற்பதில்லை. உள்ளத்தில் உறையும் அவனைப் புத்தியால் எவர் அறிகிருர்களோ அவர்களே மரணத்தைக் கடக்கிருர்கள். சிவனே! உன்னுடைய தட்சிணுமூர்த்தி- வடிவம் எதுவோ அதனுல் என்னைக் காத்தருள்வாயாக.

## 5

அறிவு அறியாமை ஆகிய இரண்டும் பரப்பிரம்மத் திடம் வைக்கப்பட்டிருக்கின்றன. அறியாமை அழி வது; அறிவு அழியாதது. எவன் பிரகிருதியின் வடி வந்தோறும் ஊடுருவி நிற்கிருனே, எவன் எல்லா வற்றையும் அறிகிருனே, ஹிரண்யகர்ப்பன் ஆதியில் பிறந்ததைப் பார்த்து அவனுக்கு ஞானத்தையளித் தவன் எவனே, அவனே அந்தப் பரப்பிரம்மம். எப்படிச் சூரியன் மேலும் கீழும் குறுக்கிலும் எல்லாத் திசைகளிலும் ஒளியைப் பரப்புகிருனே அது போலவே பகவான் ஒருவனுகவே இவை எல்லா வற்றுக்கும் மேலிருந்து ஆளுகிருன்.

முக்குணங்களுக்கு வசப்பட்டவன் பயனைக் கருதிச் செயல் புரிபவனுகவும், அந்தச் செயலின் பயனை அனுபவிப்பவனுகவும் ஆகிருன். அவன்

---

* மூன்று வகைப்பட்ட மார்க்கமாவது தர்மம், அதர்மம், தர்மத்தையும் அதர்மத்தையும் கடந்த ஞானம்; அல்லது தேவயானம், பித்ருயானம், திர்யங்மார்க்கம் (கீழ்ப்பட்ட பிறவி).

இந்திரியங்களை அடக்கியாள்பவனாக இருந்தாலுங் கூட முக்குணங்களுக்கு வசப்பட்டுப் பலவேறு உருவங்களைத் தாங்கித் தன் கர்மங்களால் மூன்று வகைப்பட்ட மார்க்கத்தில்* உலவுகிறான்.

ஒரு மயிரிழையின் நுனியை நூறு பாகமாக்கி மீண்டும் அதை நூறு பாகமாக்கினால் எவ்வளவு சூட்சுமமாக இருக்குமோ அவ்வளவு சூட்சுமமான வன் ஜீவன். அவன் பெண்ணுமல்லன், ஆணுமல்லன், அலியுமல்லன். செயலின் குணங்களாலும் மனதின் குணங்களாலும் எந்த எந்த உடலை அவன் எடுத்துக் கொள்ளுகிறானோ அத்துடன் ஒன்றுபட்டு நிற்கிறான்.

அடி முடியில்லாதவனும், அநேக வடிவங்களை உடையவனும், அவித்தையினிடையில் அனைத்துலகையும் சிருஷ்டிப்பவனும், அனைத்தையும் ஒருவனாக வியாபித்திருப்பவனும் ஆகிய தேவனை அறிந்தபிறகே ஒருவன் எல்லாக் கட்டுகளிலிருந்தும் விடுபடுகிறான்.

## 6

எதனால் உலகமாகிய இந்தப் பெரிய சக்கரம் சுழற்றப்படுகிறதோ அதை இயற்கை என்று சில அறிஞர்களும்* காலம் என்று பிறரும் மதிமயங்கியவர்களாகக் கூறுகிறார்கள். இது எல்லாமே தெய்வத்தின் மகிமையே ஆகும். எவனால் இது எல்லாம் எப்போதும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, எவன் அறிவுமயமானவனோ, காலத்தையும் சிருஷ்டிப்பவனோ, குணங்களுக்கும் ஈசனோ, எல்லாம் அறிந்தவனோ, அவனால் ஏவப்பெற்றே கிரியாசக்தியானது பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் எனத் தோன்றுகிறது என்று சிந்தித்து உணரவேண்டும். ஈசுவரார்ப்பணமாகக் கர்மத்தைச் செய்து, அதனால் கர்மத்தளையிலிருந்து விடுபட்டு, ஒருவன் நாளடைவில் முக்தி எய்துகிறான்.

ஈசுவரன் பெரிய மரம் போல வளரும் சம்சாரத்தையும் காலத்தையும் உருவத்தையும் கடந்து தனியாக நிற்பவன். அவனிடமிருந்தே இந்தப் பிரபஞ்சம் தோன்றிச் சுழல்கிறது. ஈசுவரர்களுக்கெல்லாம் மகேசுவரனும், தேவதைகளுக்கெல்லாம் மேலான தெய்வமும், தலைவர்களுக்கெல்லாம் மேலான தலைவனும், போற்றுதற்கு உரிய உலக நாயகனும், அனைத்திற்கும்மேலானவனுமாகிய அந்தத் தேவனை நாம் அறிய வேண்டும்.

அவனுக்குக் காரியமில்லை, காரணமுமில்லை. அவனுக்கு மேலானவனோ சமமானவனோ இல்லை. அவனுடைய சிறந்த சக்தியும், இயற்கையான ஞானமும் பலமும் செயலும் வெகுவாக வேதங்களில் கூறப்படுகின்றன. சிலந்திப்பூச்சி தன் நூல்களால் தன்னை மறைத்துக்கொள்வது போல, பிரகிருதியில் தோன்றும் பொருள்களால் அவன் தன்னை மறைத்துக்கொள்ளுகிறான்.

நிலையுள்ள பொருள்களிடையே நிலையுள்ளவனாகவும், அறிவுள்ள உயிர்களின் அறிவாகவும், ஒருவனாக நின்று அனைவருடைய ஆசைகளையும் அறிபவனாகவும், அனைத்திற்கும் காரணமாகவும், ஞான யோகத்தால் அடைவதற்கு உரியவனாகவும் உள்ள அந்தத் தேவனை அறிந்து ஒருவன் எல்லாத் தளைகளிலிருந்தும் விடுபடுகிறான்.

அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை; சந்திரனும் நட்சத்திரங்களும் பிரகாசிப்பதில்லை; மின்னலும் பிரகாசிப்பதில்லை; அக்கினி எப்படிப் பிரகாசிக்க முடியும்? சுயம்பிரகாசமுள்ள அவனைப் பின்பற்றியே அனைத்தும் பிரகாசிக்கிறது. அவனது ஒளியாலேயே இவையனைத்தும் விளங்குகிறது. எப்போது ஒரு தோலைச் சுருட்டுவதைப் போல மனிதர்கள் ஆகாயத்தைச் சுருட்ட இயலுமோ அப்போதே தெய்வத்தை அறியாமல் ஒருவனுக்குத் துன்பத்தின் முடிவு ஏற்படும்.*

தவத்தின் பெருமையாலும், தெய்வத்தின் அருளாலும் பிரம்மத்தை அறிந்த சுவேதாச்வதர மகரிஷி அத்யாச்ரமிகளாகிய சன்னியாசிகளுக்கு ரிஷிகளால் போற்றப்படும் இந்தப் பிரம்மவித்தையை உபதேசித்தார். எவனுக்குத் தெய்வத்திடம் சிறந்த பக்தி இருப்பது போலவே குருவினிடம் சிறந்த பக்தி உண்டோ அப்படிப்பட்ட மகாத்மாவிற்கு உபதேசிக்கப்பட்டால்தான் இந்த உபநிஷத மந்திரங்களின் அர்த்தங்கள் பிரகாசமடைவனவாகும். அப்படிப்பட்ட சீடனுக்குக் குரு வாய்விட்டுச் சொல்லாத ரகசியங்களும் தாமே விளங்கும்.

* அறிஞர்களாக இருந்தும் தெய்வத்தை ஒப்புக்கொள்ளாமை மதிமயக்கம்.

* ஒப்பிடு:— தனக்குவமை இல்லாதான்
தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றலரிது. —குறள்.



புராணங்களையும் நம் முன்னோர்களின் செயல்களையும் 'பொய், பொய்'! என்று நிரூபிக்க முயல்வதைவிட, அவற்றுள் பொதிந்து கிடக்கும் நன்னெறிகளை மக்களுக்குப் போதிக்க முயலுங்கள்.

—அனந்தராம தீட்சிதர்



# குலசைச் சான்ருேர்

திருமுருக கிருபானந்தவாரியார்



புண்ணியம் மிகுந்த நம் நாட்டில் பற்பல ஆன்ருேர் வாழ்ந்தார்கள். அவர்கள் பிறர் அறியாத வண்ணம் ஒதுங்கியும் ஆடம்பரமின்றியும் நீறுபூத்த நெருப்புப் போல் வாழ்ந்தார்கள். அப்படி வாழ்ந்தவர்களை நம்மால் நன்கு அறிய முடிவதில்லை. வானத்தில் பறவை சென்ற வழியையும் தண்ணீரில் மீன் சென்ற வழியையும் எப்படிக் காண முடிவதில்லையோ அது போல் ஞானிகள் வாழ்ந்து சென்ற வழியையும் அறிய முடிவதில்லை. இந்த வகையில் நின்றவர்களில் ஒருவர் குலசை ஞானியார். அவருடைய இனிய வரலாற்றை ஒருவாறு இங்குக் குறிப்பிடுகிறேன்.

ஆறு படைவீடுகளில் ஒன்ருகியதும், கடற்கரையில் இயற்கை வனப்புடன் விளங்குவதும் ஆகிய திருச்செந்தூருக்குத் தென்திசையில் எட்டுக் கல் தொலைவில் உள்ளது குலசேகரன்பட்டினம் என்ற நகரம். அந்த நகரம் மூவேந்தர்களும் கோடைக் காலத்தில் வந்து தங்கி மகிழும் பெருமையுடையது. குலசேகர பாண்டியன் இந்த நகரை உயர்வுறச் செய்தபடியால், அவன் திருப்பேரால் இது வழங்கப் பெறுகிறது. கடற்கரையில் மிக்க இனிமையாக விளங்குவது. பழைய காலத்தில் இது துறைமுகப் பட்டினமாக இருந்தது. காலச்சுழலால் பின்பு துறைமுகமாகத் தூத்துக்குடி என்ற பெருமை பெற்றது.

காரைக்காலம்மையாருடைய கணவன் பரமதத்தன் இந்தத் துறைமுகமாகிய குலசேகரன்பட்டினத்தில் வந்து தங்கிப் பெருவாணிபம் புரிந்தான் என்றும், மறுமணம் இங்குத்தான் புரிந்துகொண்டான் என்றும் ஆன்ருேர் கூறுவர்.

பாண்டிய மன்னர்களின் ஆட்சிநிலை குலைந்தபின் பற்பல குறுநில மன்னர்கள் பாண்டிநாட்டைத் துண்டு துண்டாக ஆட்சி செய்யத் தலைப்பட்டனர். அவர்களுள் ஒருவர் 'செந்தில் காத்த மூப்பஞர்'. இவருடைய சந்ததியார் இன்னும் இருக்கிருர்கள். திருச்செந்தூரில் நாலாம் திருவிழா இவர்கள்தாம் இன்றும் புரிகிருர்கள்.

செந்தில் காத்த மூப்பஞரிடம் அமைச்சராக இருந்தவர் முத்தணைந்த பெருமாள்பிள்ளை என்பவர். இவர் கல்வி கேள்விகளில் தலைசிறந்தவர்; பண்பு மிக்கவர். இவருடைய ஒப்பற்ற உயர்வைக் கண்டு, இவரை யாவரும் ஞானியார் என்றே அழைத்தனர்.

இவர் நாள்தோறும் பகலில் அரச காரியங்கள் அனைத்தும் புரிந்துவிட்டு, இரவில் கடற்கரை வழியே திருச்செந்தூர் சென்று அர்த்தயாம பூஜையைக் கண்டு களித்து வரும் நியதியினை வழுவாது கொண்டிருந்தார். மலையாளத்தில் பத்மநாபப் பிள்ளையன் என்பவர் பூதப்பாண்டி முதலிய பகுதிகளை அப்போது ஆண்டு வந்தார். அக்காலத்தில் மந்திரவாதிகள் பலர் அங்கு இருந்தார்கள். அவர்கள் சிறு தேவதைகளை மந்திரத்தால் வசியஞ்செய்து பற்பல கருமங்களைப் புரிந்து வந்தார்கள். இத்தகைய மாந்திரிகர்களில் மிகவும் பெயர்பெற்றவர் பொல்லாப் பிள்ளை ஆசான் என்பவர். உள்ளபடியே பொல்லாதவர்தாம் இவர். மலையாள மன்னர் இவரை அழைத்து, "இலங்கையிலே கண்டி மன்னவருடைய புதல்வியைக் கொணர்ந்து தர வேண்டும்" என்று வேண்டிஞர். மந்திரவாதி அதற்கு இசைந்து சில தேவதைகளைக் கண்டிக்கு ஏவிஞர். அந்தத் தேவதைகள் கண்டி சென்று கன்னிமாடத்தில் துயின்றுகொண்டிருந்த அரசகுமாரியைக் கட்டிலுடன் தூக்கிக் கொண்டு விண்வழியே சென்றுகொண்டிருந்தன.

ஞானியார் குலசேகரன்பட்டினத்தில் மூப்பஞர் குளத்தில் கைகால்கள் கழுவிக்கொண்டிருந்தார். நல்ல நிலவு. வானத்தில் போகும் கட்டிலின் நிழல், நீரில் தெரிந்தது. ஞானியார் திருச்செந்தூர் சென்று இரவுபூசையைத் தரிசித்து வந்து, அங்குள்ள பிள்ளையாரையும் வணங்குவது வழக்கம். குளத்தின் படியில் நின்றுகொண்டிருந்த அவர், 'இது சிறு தேவதைகளின் செயல்' என்று அறிந்தார். தமது திருக்கரத்திஞல் கட்டிலை இறக்குமாறு காட்டிஞர். தேவதைகள் அவருக்கு முன் கட்டிலுடன் அந்த மாதரசியை இறக்கி வைத்தன.

ஞானியார் சிறிது ஜபம் செய்தபின் கட்டிலில் துயிலும் அரசகுமாரியைக் கண்டு இரக்கமுற்ருர். நடந்த செயலைத் தமது திருவுள்ளத்தில் அறிந்து

கொண்டார். இவளை மீண்டும் கொண்டுபோய்க் கண்டியில் அரண்மனையில் விட்டுவிடுமாறு அந்தத் தேவதைகளுக்குக் கட்டளையிட்டார். இவருடைய அருள்திறத்திற்கு அஞ்சிய தேவதைகள் அவ்வாறே அந்த மாதரசியை உரிய இடத்தில் சேர்த்துவிட்டு அஞ்சியகன்றன.

மந்திரசக்தியால் இதைப் பொல்லாப் பிள்ளை ஆசான் அறிந்தார். பலப் பல துர்த்தேவதைகளை இவரைக் கொல்லும்பொருட்டு ஏவினர்; அந்தக் கொடிய தேவதைகள் இவரிடம் வந்து இவருடைய தவவலிமையையும், முருகன் கருணைத்திறத்தையும் பார்த்துவிட்டு, நடுங்கி ஒடுங்கி வறிதே மீண்டும் சென்றன.

மந்திரவாதி முடிவில் வயிரவரை ஏவினர். வயிரவர் உக்கிர வடிவுடன் வந்தனர். ஞானியார் வயிரவரை நோக்கி, ''இனி நீர் அந்த மந்திரவாதியிடம் போகக் கூடாது இங்கேயே இரும்'' என்று, தமது வீட்டுக்கு முன் ஒரு பீடம் இட்டு அவரை அங்கேயே இருத்திவிட்டார். செந்திலாண்டவன் கருணை பெற்ற அவருடைய விருப்பப்படி வயிரவர் அங்கேயே தங்கிவிட்டார். இன்றும் இவருடைய குடும்பத்தார் இந்த வயிரவருக்கு வழிபாடு புரிந்து வருகிறார்கள்.

ஞானியாரைக் கொல்ல அனுப்பிய தேவதைகளில் ஒன்றேனும் திரும்பி வராததைக் கண்ட பொல்லாப்பிள்ளை ஆசான் மருண்டார்; மனம் கலங்கினர். அவரும், பத்மநாபப்பிள்ளையன் என்ற மலையாள மன்னவனும் குலசை வந்து ஞானியாரைக் கண்டார்கள். ஞானியார் அவர்களை வரவேற்று, இன்னுரை கூறி இனிய உணவுகளை வழங்கினர். சிறிது நேரத்திற்குப் பின் மந்திரவாதியை அழைத்து, தமது வீட்டின் ஓர் அறையின் கதவைத் திறந்து பார்க்குமாறு கூறினர். அவர் திறந்து பார்த்தார். அந்த அறையில் தம்முடைய மனைவி மக்களைக் கண்டார்; கலங்கினர்; அந்தோ என்று அலறினர். ஞானியார் கதவை மூடி மறுபடியும் திறக்கச் சொன்னர். அவர்கள் அப்போது அங்குக் காணப்பெறவில்லை.

பொல்லாப்பிள்ளையாசானுக்கு ஞானியார் அறிவுரை கூறி, ''உன் மனைவி மக்களை யான் மந்திரத்தால் இங்கு அழைத்ததைக் கண்டு நீ வாடி வருந்தியது போல்தானே, கண்டி மன்னவன் மகளை அழைத்ததால், அந்த மன்னவன் வருந்துவான்? ஆதலால் மந்திரசக்தியைத் தீய வழியில் செலுத்துவது முறையன்று. இனி அவ்வண்ணம் செய்யாதே. நல்வழியில் நடந்து நலம் பெறுவாயாக'' என்று கூறிப் போய்வருமாறு கட்டளையிட்டார். வணங்கிய மன்னவனும் மந்திரவாதியும் திரும்பிச் சென்ருர்கள்.

ஞானியாருடைய பெருமை எங்கும் பரவியது. இவருடைய தளர்ந்த வயதைக் கண்ட செந்தில் காத்த மூப்பனர், 'இனி இவரை அரசகாரியத்தில் ஈடுபடுத்தி வருத்துவது பிழை' என்று கருதி, பொன்னும் பொருளும் வழங்கி அவரை வீட்டிலேயே இருந்து இளைப்பாறுமாறு செய்தார்.

ஞானியார் வயது முதிர்ந்து தளர்ச்சியோடிருந்த நாளிலும் நாள்தோறும் கடற்கரை வழியே செந்திலுக்குச் சென்று கந்தவேளை வழிபட்டு வருவதை நிறுத்தவில்லை.

ஒரு நாள் இரவில் செந்திலுக்குச் சென்றுகொண்டிருந்தார். மழைக் காலம். நல்ல இருட்டு. ஞானியார் சற்று வழிதவறித் திகைப்புற்றுர். அவருக்கு முன்னே ஒருவர் விளக்கும் செயகண்டியும் கொண்டு, ''ஐயா! நான் திருச்செந்தூருக்குச் செல்லுகிறேன்; என்னுடன் வாரும்'' என்று கூறி, அவரை அழைத்துக்கொண்டு போய்க் கோயில் ஷண்முகவிலாசத்திற்கு முன்னிட்டு மறைந்தார். முருகனே வந்து தமக்கு வழிகாட்டினர் என்று அறிந்த ஞானியார் உள்ளம் உருகினர். ''முருகா உன் கருணை இருந்தவாறு என்னே! மூவரும் தேவரும் காணுத உனது திருவடி ஏழையேன் பொருட்டு நிலத்தில் நடந்து வந்ததே! ஆ! என்ன அதிசயம்! ஐயனே! இந்தப் பாவியின் பொருட்டு நீ நடந்தனையே! செயகண்டி தட்டிக்கொண்டு விளக்கேந்தி எட்டுக் கல் நடந்து வந்தாயே! கருணைக் கடலே! கலியுக வரதா! பக்தி இல்லாத பாவியேனிடம் உனக்கு இத்தனை கருணை இருந்ததே!'' என்று கூறி அழுதார்; அஞ்சலி செய்தார்.

கோயிலில், ஞானியார் வரவுக்காக அர்த்தயாம பூசையைச் செய்யாது காத்துக்கொண்டிருந்தனர். அவரைக் கண்டபின் அந்தப் பூஜை நிகழ்ந்தது. ஆண்டவனை அன்புடன் வழிபட்டு அன்றிரவே ஞானியார் திரும்பிக் குலசேகரப்பட்டினம் சேர்ந்தார்.

ஒரு நாள் திருச்செந்தூர்க் கோயிலில் ஞானியார் ஒரு புறம் நின்று எம்பெருமானைச் சேவித்துக்கொண்டிருந்தார். அந்த வட்டாரத்தை ஆண்டுகொண்டிருந்த அரசியல் தலைவன் ஒருவன் கோவிலுக்கு வந்தான். அவனுடன் வந்த அதிகாரி ஒருவன் ஞானியாரைப் பார்த்து அவர் பெருமையை அறியாது,

''ஓய்! அதிகாரி வருகிறார். நீ ஏன் தூண்போல் நிற்கின்றாய்? விலகிப் போ'' என்று கூறி அதட்டினான். ஞானியார் சற்று விலகி நின்றார். இதனை அறிந்த கோயிலில் உள்ளவர்கள், ''ஐயா! அவர் ஞானியார். மிகவும் பெரியவர். அவரை விரட்ட வேண்டாம்'' என்றார்கள். அதைக் கேட்ட அரச அதிகாரி, ''ஓ! ஞானியாரா? மழையை வரவழைப்பாரோ?'' என்று கூறிப் பரிகசித்தான். சுவாமி தரிசனம் முடிந்ததும் கோயிலை விட்டுப் புறப்பட்டான்; வெளியே வந்தான். வந்தன இடியும் மழையும். அவனை அன்றிரவு முழுவதும் வீட்டிற்குப் போகாவண்ணம் தடுத்தன. அப்போது அவன் ஞானியார் பெருமையை உணர்ந்து அவர் பாதகமலங்களில் வீழ்ந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

ஞானியாருக்கு நிரம்பவும் மூப்பு வந்து விட்டது. செந்தில்மேவிய கந்தக்கடவுள் அவருடைய கனவில் சென்று, ''அன்பனே! உனக்கு அதிக வயதாகி விட்டது. நீ இனித் தள்ளாடிக்கொண்டு செந்திலுக்கு வர வேண்டாம். இரவில் அர்த்தயாம பூசை முடிந்தபின், நானே உன் வீட்டிற்கு வருவேன். என்னைத் தரிசிப்பாயாக!'' என்று அருள்புரிந்தார். அதுமுதல் ஞானியார் இரவில் தமது பூசைவீட்டில் முருகனை வழிபட்டார். இவருடைய வீட்டிற்கு, 'முருகன் படுக்கை வீட்டுக் கோயில்' என்ற பெயர் ஏற்பட்டது. இன்றும் இது குலசையில் இருக்கிறது. இவருடைய சந்ததியார் இங்கு வழிபாடு புரிந்து வருகிறார்கள்.

ஒரு நாள் ஞானியார் குலசையில் மிக்க தளர்ச்சியுடன் படுக்கையில் இருந்தார். உச்சிப்பொழுது. நல்ல வெயில். அதே சமயத்தில் திருச்செந்தூர்க் கோயிலில் ஞானியார் கொடிமரத்தின் அருகில் வழக்கமாக நின்று சேவிப்பது போல் செந்திலாண்டவனைச் சேவித்துக் கொண்டு நின்றார். எல்லோரும் காண அவர் திடீர் என்று மூலத்தானத்திற்குள் நுழைந்தார். 'இது என்ன அநியாயம்?' இவர் மூலத்தானத்திற்குள் நுழைந்து போகிறாரே? இது தகுமா? முறையா?' என்று அர்ச்சகர்கள் திகைத்து அவர்பின் உள்ளே சென்றார்கள். ஞானியார் உருவம் உள்ளே முருகப்பெருமான் திருவுருவில் மறைந்து விட்டது.

இதே சமயம் குலசேகரப்பட்டினத்தில் ஞானியாருக்கு ஆவி பிரிந்தது. பின்னர் அங்கிருந்து சிலர் அபிஷேக தீர்த்தம் கொண்டு போகக் கோயிலுக்கு வந்து, ஞானியார் ஆன்மா சாந்தி பெற்றதாகக் கூறினார்கள். தாங்கள் அவரைக் கோயிலில் முருகன் உருவில் கலந்த காட்சியைக் கண்டதாகக் கோயில் அன்பர்கள் கூறி அதிசயித்து அவரைப் போற்றினார்கள். கோயில் அபிஷேகதீர்த்தம் கொண்டுபோய் ஞானியார் திருமேனிக்கு அபிஷேக ஆராதனை புரிந்து, எல்லோரும் மிக்க பயபக்தியுடன் குலசேகரன் பட்டினத்தில் ஒருபுறம் அடக்கம் புரிந்து, அங்குச் சிறு சமாதிக் கோயிலும் புதுக்கினார்கள். அதற்கு இன்னும் வழிபாடு நடந்து வருகிறது. கோயிலிலிருந்து, ஞானியார் சமாதிக் கோயிலுக்கு, முருகன் பேர் பொறித்த ஒரு குத்து விளக்கும் சில நிலங்களும் இனுமாகக் கோயில் அதிகாரிகள் வழங்கினார்கள். அந்த விளக்கு இன்றும் அங்கு இருப்பதைக் காணலாம்.

இத்தகைய ஞானியார் அவர்கள் சமாதியையும், அவர் வாழ்ந்த வீடு என்ற படுக்கைக் கோயிலையும், அன்பர்கள் தரிசித்துத் திருச்செந்தூர் முருகன் கருணையைப் பெறுவார்களாக! ★

---



சமய உண்மை என்பது அவரவர் அறிவாற்றலுக்கும் அனுபவத்திற்கும் ஏற்றவாறு விளங்கத் தோன்றுவது.

—திரு.வி.க.

சமூகத்துக்காகவும் நாட்டுக்காகவும் உயிரையும் கொடுக்க வரும் தியாக புத்தியினால் மனிதன் உயருகிறான்.

—கல்கி

எவ்வளவு படித்தவனாயினும் தன்மை கெட்ட உள்ளமும் மனமும் உலர்ந்து போனால் அவை இரண்டும் பயனற்றுப் போகின்றன.

ஜே. கிருஷ்ணமூர்த்தி

ஞானாசிரியனுடைய கிருபை இல்லாமல் அநேக சாஸ்திரங்களைப் படித்திருந்தாலும் சர்வ வியாபகப் பொருளான சிவபெருமானைத் தரிசிப்பது மிகவும் அருமையான காரியமேயாகும்.

—ஔவைக் குறள்

# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களின் வேறுபாடுகளுக்கு ஏற்ப, கர்மம் மூன்று வகையாக இருக்கிறது. நன்மை பயக்கும் சத் கர்மம் சாத்துவிகமானது. தவறானதாகவும் தீமை பயப்பதாகவும் உள்ள கர்மம் தாமஸிகமானது. இவை இரண்டும் கலந்த கர்மம் ராஜஸிகமானது.

அந்தக்கரணத்தின் மீதோ சூட்சும சரீரத்தின் மீதோ, செயல்கள் போன்ற காரணங்களால் எந்த அறிகுறியோ அல்லது சுவடோ படிகிறதோ அது சம்ஸ்காரம் எனப்படும். இந்தச் சம்ஸ்காரத்தைத் தான் நாம் கர்மம், அதிர்ஷ்டம் (கண்ணுக்குப் புலப் படாதது), வினை, விதி என்றும், தர்மம் அதர்மம் என்றும், பாவம் புண்ணியம் என்றும் பலவிதங்களில் கூறுகிறோம்.

காரணம் இல்லாமல் காரியம் (விளைவு) இருக்க முடியாது. நம்முடைய இயல்பு நல்லதாகவோ கெட்டதாகவோ எப்படிப்பட்டதாக இருந்தாலும், அவை யாவும் முன்பு நம்மால் சேமிக்கப்பட்ட சம்ஸ்காரங்களின் தூண்டுதல்களே ஆகும். இந்தச் சம்ஸ்காரங்களுள் எவற்றுக்குச் சாதகமான சூழ்நிலை கிட்டுகிறதோ அவை மட்டுமே ஒரு தருணத்தில் வெளிப்பட்டுச் செயற்படுகின்றன.

மற்றச் சம்ஸ்காரங்கள் உள்ளேயே அடங்கி யிருந்து தக்க சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருக் கின்றன. பொருத்தமான நேரம் வந்ததும் நல்ல பயன்களையோ கெட்ட பயன்களையோ உண்டு பண்ணுகின்றன.

நாம் எதைச் செய்தாலும் அதில் நன்மையும் தீமையும் கலந்தே இருக்கின்றன. ஆகவேதான் நமக்குக் கிடைக்கும் பலனில் இன்பமும் துன்பமும் கலந்தே வருகின்றன. ஏதாவது ஒன்றை நல்லது என்றோ, கெட்டது என்றோ பாகுபடுத்திச் சொல்வது அதில் எது அதிகமாக இருக்கிறதோ அதைப் பொறுத்தே ஆகும்.

* * * *

விதி விலக்கு என்று இல்லாமல், எல்லாவிதமான கர்மங்களுமே பந்தத்தை உண்டுபண்ணுகின்றன. இன்பமாக இருந்தாலும் சரி, துன்பமாக இருந்தாலும் சரி, இரண்டும் பந்தமே ஆகும். இந்த இரண்டை யுமே கடந்து அப்பால் சென்றாலன்றி ஒருவன் முக்தியை அடைய முடியாது.

'நான்' என்ற எண்ணம் இல்லாமல் பிறருடைய நன்மைக்காக உழைப்பவர்களுக்குக் கர்மபலனில் ஆசை கிடையாது; அவர்கள் தங்களுடைய சுய நலனுக்காகவோ பெயர் புகழுக்காகவோ உழைப்ப தில்லை—இந்த மனநிலையைக் கொண்ட ஒரு சில ருடைய விஷயத்தில் மட்டும் கர்மம் பந்தத்துக்குக் காரணமாக ஆவதில்லை. அவர்களுடைய இதயத் தில் கடவுள் பக்தி (பகவத் பிரேமை) ஊற்றெடுக் கிறது. அவர்கள் எல்லா உயிர்களிடமும் இறை வனையே காண்கிறார்கள். இறைவனுக்குச் செய்யும் தொண்டாகவே அவர்கள் செயல் புரிகிறார்கள். இதன் பயனாக அவர்கள் செய்யும் பணியானது, ஏற்கனவே சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் எல்லாப் பழைய வினைகளையும்—அந்த வினைகள் காரணமாக இனி விளைய இருக்கும் பயன்களையும்—அழித்து விடுகிறது. இவ்விதம் எல்லாப் பழவினைகளும் தேய்ந்து போவதோடு, அவர்களின் உள்ளத்தில் புதிய சம்ஸ்காரங்களை உண்டுபண்ணும் வித்து எதையும் உண்டாக்குவதில்லை.

எனவே அவர்கள் மீண்டும் மீண்டும் ஏற்படுகிற பிறப்புக்கும் இறப்புக்கும் உரிய காரணங்களிலிருந்து விடுபட்டு, ஸ்தூல உடல் அற்று விழுந்தவுடனே முக்தியைப் பெறுவதற்குத் தகுதி உடையவர்கள் ஆகிறார்கள்.

* * * *

புலன்களால் அனுபவிக்கப்படும் இன்பங்களில் மகிழ்ச்சி கிடையாது. தியாகம் ஒன்றில்தான் உண்மையான மகிழ்ச்சி இருக்கிறது. உண்மைப் பொருளுக்கும் பொய்ப் பொருளுக்கும் உள்ள வேறு

பாட்டை விவேகம் பழகுவதன் மூலமாகவோ, அல்லது மீண்டும் மீண்டும் துன்பங்களை அனுபவிப்பதன் மூலமாகவோ எவனொருவன் நல்ல படிப்பினையைப் பெற்றிருக்கிறானோ, எல்லா உலக இன்பங்களும் சாரமற்றவை, முடிவில் துன்பத்தையே தருபவை என்பதை உணர்ந்து அவற்றின் மீது பற்றுக் கொள்ளாமல் தன் சங்கல்பத்தாலேயே எல்லாவற்றையும் துறந்துவிடுகிறானோ அவனே பேரின்பம் துய்க்கிறான்; அவனே அழியாத அமிருத நிலைக்கு உரிமையாளன் ஆகிறான்.

சுவாமி விவேகானந்தர் தம்முடைய பக்தியோகம் என்னும் நூலில், இந்தத் துறவு மனப்பான்மைதான் நான்குவித யோகங்களுக்குமே உயிர்நாடியாக விளங்குகிறது என்பதை எடுத்துக்காட்டியுள்ளார்.

* * * *

கர்மயோகியானவன் 'கடவுள்தான் கர்த்தா, நான் கர்த்தா அல்ல' என்பதை உணர்ந்து, கர்ம பலனில் பற்றுக் கொள்ளாமல் அந்தப் பலனை இறைவனுக்கே அர்ப்பணம் செய்துவிடுகிறான்.

ராஜயோகியோ, 'பிரகிருதியானது புருஷனுக்கேயன்றி, புருஷன் பிரகிருதிக்காக இல்லை' என்பதை அறிவான்.

புருஷன், ஆத்மாவாகத் திகழ்கிறது; பிரகிருதியோ ஜடமானது. எனவே புருஷன் பிரகிருதியிலிருந்து முற்றிலும் வேறுபட்டவன். அவர்களுக்கு இடையே இப்போதுள்ள தொடர்பு தாற்காலிகமானது, நிலையற்றது. புருஷன் பிரகிருதிக்கு அடிமைப் பட்டவன் அல்ல. புருஷன் எஜமானன், பிரகிருதியோ புருஷனுக்கு அடிமையாக இருப்பது. புருஷன் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்வதற்காகவே பிரகிருதி இருக்கிறது. புருஷனைப் பலவேறு அனுபவங்களின் மூலம் அழைத்துச் சென்று, அதன் பயனாகப் புருஷன் தன் நிஜசொரூபத்தை உணரும்படி செய்வதே பிரகிருதியின் காரியமாகும்.

ஆதலால் ராஜயோகியானவன் பிரகிருதியுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்வதில்லை. பிரகிருதியிடம் அவன் மோகம் கொள்வதில்லை.

* * * *

ஞானயோகியின் துறவுதான் எல்லாவற்றிலும் மிகவும் கடினமானது. ஏனென்றால் ஞானயோகி ஆரம்பத்திலிருந்தே, உலகம் முழுவதும், அதனுடன் தனக்குள்ள தொடர்பு முழுவதும் பொய் என்றும், வாழ்க்கை முழுவதும் கனவு போன்ற பொய் என்றும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அவனுடைய மார்க்கமே 'நேதி, நேதி (இதுவல்ல, இதுவல்ல)' என்னும் மார்க்கமாகும். 'நான் இதுவும் அல்ல, அதுவும் அல்ல. காண்பது எதுவும் அல்ல. எதையும் உடைமையாகக் கொண்டவனும் அல்ல. உடல் அல்ல, மனம் அல்ல, புலன்களில் எதுவுமே நான் அல்ல; எனக்கு இன்பம் இல்லை, துன்பம் இல்லை; பிறப்பு இல்லை, இறப்பு இல்லை; எனக்குப் பந்தம் என்பதும் இல்லை, முக்தி என்பதும் இல்லை. நான் நித்தியனும் சுத்தனும் புத்தனும் முக்தனும் சைதன்ய சொருபனும் பூரணப் பிரம்மமும் ஆகிய பரமாத்மா' என்று கொள்வதே ஞான மார்க்கமாகும்.

புறப்பொருள்கள் எல்லாவற்றையும் ஞானயோகி துறந்துவிட்டு, சொருபத் தியானத்திலேயே ஆழ்ந்து மூழ்க வேண்டும்.

* * * *

---

தர்மமும் சத்தியமுமே வாழ்க்கையின் குறிக்கோள்களாக இருக்கும் நிலையை உருவாக்க வேண்டும். அறவழி நின்று சத்தியத்தில் வேரூன்றியவர்களாக மக்களை ஆக்க வேண்டும். ஆலயங்களுக்குச் சென்று வருவதன் மூலமும், பாரதம் போன்ற இதிகாசங்களைக் கேட்பதன் மூலமும் உள்ளும் புறமும் உள்ள குறைபாடுகளை நீக்கித் தூய்மை பெறலாம்.

—ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள்

தன் நலனிலேயே, இன்பத்திலேயே கருத்தாக இருப்பதனால் எவன் துன்பத்தில் கிடந்து அவதிப்படும் பிற உயிர்களிடம் கவனம் செலுத்துவதில்லையோ, அவனைவிடக் கொடிய கல்நெஞ்சம் உள்ளவன் உலகில் வேறு யார்? ஏழைகள், குருடர், செவிடர், அங்கஹீனர், நோயாளிகள் ஆகியோரைக் கண்ட பின்பும் எவனது உள்ளத்தில் தயை தோன்றவில்லையோ அவன் மனிதனல்ல; அரக்கனே.

—கந்தப்புராணம்



# உபநிஷத்தில் ஒரு மந்திரம்

சுவாமி அமரானந்தர்



''ஜகத்தில் மாறி மாறி அமைகிற யாவும் ஈசனுல் வியாபிக்கப்பட வேண்டும். இத்தகைய தியாகத் தின் மூலம் உன்னைக் காத்துக்கொள். யாருடைய செல்வத்தையும் விரும்பாதே.''

—இது ஈசாவாஸ்யோபநிஷத்தின் முதல் மந்திரம்.

ஜகத் என்ற சொல், 'மாறுபடும் தன்மையுடையது' என்று பொருள்படுகிறது. பிரபஞ்சம் கணந்தோறும் மாறியமைந்துகொண்டிருப்பது கண்கூடு. ஆகாயம் எங்கும் வியாபித்திருப்பதைப் போல இந்தப் பிரபஞ்சம் முழுவதும் இறைவனுல் வியாபிக் கப்பட்டிருக்கிறது. 'எங்கெங்கே பார்த்தாலும் எவ் வுயிர்க்கும் அவ்வுயிராய் அங்கங்கிருப்பது நீயன்றோ பராபரமே' என்பது தாயுமானவரின் தகுதி வாய்ந்த வாக்கு.

இறைவன் ஜகத்தில் புலன்களுக்குப் புலப்படாமல் ஊடுருவியிருக்கிறன். இடையீடின்றி ஈசன் எங்கும் நிறைந்திருப்பதனுல் ஜகத்தில் உள்ள செல்வம் முழுவதும் இறைவனின் உடைமையே ஆகிறது. ஜீவாத்மாவின் ஆற்றலுக்கு ஏற்பவும் அவனுக்கு நன்மையளிக்கும் அளவுக்கும் செல்வம் பகிர்ந்தளிக்கப்படுகிறது. மிகைப்பட்டுள்ள பொருள்கள் யாவும் கவர்ந்தெடுக்கப் படுகின்றன. இதை உணர்ந்த ஆத்மசாதகன் தனக்கு என்று மிகைப்படப் பொருள் வைத்துக்கொள்வதில்லை. அபரிக்ரஹம் அதாவது பொருள் படையாமை என்ற சொல்லுக்கு ஏற்றுற்போல் அவன் வாழ்கிறன். ஆகையால், அவன் தியாகி ஆகிறன்.

தியாகத்தின் மூலம் இறைவனுடன் அவனுடைய தொடர்பு அதிகரிக்கிறது. குழந்தை தாயின் அணைப்பில் இன்பம் துய்ப்பது போல, ஈசனுடைய இணைப்பில் ஆத்மசாதகன் இன்பம் துய்க்கிறன். அதன்மூலம் அவனுடைய வாழ்வு மேன்மை பெறுகிறது. பிறருடைய செல்வத்தைக் கவருதல் கள்ளத்தனம் ஆகிறது. வெளிப்படையாகப் பிறர் பொருளைக் காணுமல் கவர்பவன் கள்வன் என்ற பெயர் பெறுகிறன். அது போல் மறைமுகமாகப் பிறர் பொருளைக் கவர்வதும் கள்ளத்தனம் என்ற கயமையைப் பெறுகிறது. ஆத்மசாதகன் ஒருவன் தன் உள்ளத்திலும் அத்தகைய கயமையான எண்ணம் படையாதிருப்பது அவசியமாகிறது.

இனி, செல்வம் முழுவதும் இறைவனுக்குச் சொந்தமானது, ஜீவனுடையது அல்ல என்பதைச் சில சான்றுகள் மூலம் தெளிந்துகொள்ளலாம். ஒரு தேசத்திலுள்ள எல்லாச் செல்வமும் அந்தத் தேசத்தின் பொது உடைமையாகிறது. இந்தச் செல்வங்கள் முழுவதையும் அரசாங்கம் நிர்வகித்து வருகிறது. ஒருவன் தன்னுடையது என்று தேடி வைத்திருக்கும் செல்வம் அனைத்தையும் தேவைப் படும்போது சட்டத்தின் மூலம் அரசாங்கம் எடுத்துக் கொள்கிறது. மாடமாளிகை நிறைந்த நகரத்தின் கீழே பூமியில் உயர்ந்த தாதுப்பொருள் இருப்பதாகத் தெரிய வந்தால், அரசு அந்த நகரையே அழித்து விடுகிறது. அணைகட்டி நீர் தேக்கப்படும்போது பல ஊர்கள் அதில் மூழ்கிவிடுகின்றன. அண்மையில் உள்ள சாகுபடி நிலங்களையும் அரசாங்கம் அபகரித்துக் கொள்கிறது. நிலத்தில் விளையும் விளை பொருள்களையும் அவசியமாகும்போது எடுத்துக் கொள்ளுகிறது. கொள்ளைநோய் பரவும்போதும் அந்நிய நாட்டின் படையெடுப்பின் போதும் தன் செல்வத்தையெல்லாம் தானுகவே விட்டு ஓட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது.

இனி, இயற்கையன்னையின் கொடூரச் செயல்களாகிய பெருவெள்ளம், புயல், பெரும் தீ முதலான வற்றில், மனிதன் தேடிய எல்லாப் பொருள்களும் அழிந்துவிடுகின்றன. கடைசியாக மரணம் வரும் போது, ஈட்டிய பொருள் அனைத்தும் தானுகவே அவனை விட்டு விலகிவிடுகிறது. இவ்விதம் ஆராயும் போது, ஜீவாத்மாவுக்கு உலகத்தில் சொந்தமானது எதுவும் இல்லை. ''உன்னையே நீ எண்ணிப் பாரு, இவ்வுலகத்தில் எது சொந்தம், யோசித்துக் கூறு'' என்பது ஞானவாக்கியம். இந்த உண்மையை அறிந்து, 'செல்வம் அனைத்தும் அரசாங்கத் தினுடையது அல்லது ஈசனுடையது' என்று உணர்ந்து அனுபவித்து வரும் ஜீவாத்மா அந்தச்

செல்வங்கள் அரசாங்கத்தின் மூலமாகவோ இயற்கையன்னையின் வாயிலாகவோ தன்னை விட்டு அகலும்போது அல்லல் உறுவதில்லை.

இவ்விதமின்றித் தேடியது அனைத்தும் தன்னுடையது என்ற மமகாரத்தோடு உள்ள ஜீவன், அவை அகலும்போது அல்லற்படுகிறான். பிறர் பொருளைக் கவராமல் ஒருவன் மிகைபடப் பொருள் படைத்திருக்க இயலாது. மிகைபட்ட பொருள்கள் யாவும் அவனை விட்டு அகன்றுவிடுகின்றன. எனவே நேரிடையாகவோ மறைமுகமாகவோ பிறர் பொருளைக் கவராதிருப்பவனுக்கு இன்பமும் சாந்தியும் நிலவுகின்றன; மற்றவர்களுக்கு இல்லை.

"பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தான பிறகு அந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் பராசக்தி வியாபித்திருக்கிறாள்."

—பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# முருகன் என்னும் தத்துவம்

பிரம்மசாரி முத்துக்குமார்

ஜீவன் அடைய வேண்டிய மிகவும் உயர்ந்த இலட்சியத்தின் உருவமாக முருகப்பெருமான் விளங்குகிறார். சுப்பிரமண்யம் என்பது முருகனின் திருநாமங்களில் ஒன்று. நன்றாக, ஸ்திரமாகப் பிரம்மத்தில் நிலைத்திருப்பவர் என்பது அந்தத் திருநாமத்தின் பொருள் ஆகும். பிரம்மண்யம் என்பதற்கு, பிரம்ம ஞானத்தில் விருப்பத்தை வளர்ப்பது என்றும் ஒரு பொருள் உண்டு. உயர்ந்த விஷயங்களில் ஈடுபடும் ஆவலை வளர்ப்பவன் என்றும், நல்லவர்களுக்கு இனியவன் என்றும் சுப்பிரமணியன் என்னும் பெயருக்கு விளக்கம் கூறலாம்.

நமது உண்மையான சொரூபமாகச் சுப்பிரமண்யர் விளங்குகிறார். சுப்பிரமண்யரை நாம் அறிந்து கொண்டால் நாம் நம்மையே அறிந்தவர்கள் ஆகிறோம். இதுவே சுப்பிரமண்யரின் திருவுருவம் விளக்கும் மிகப் பெரிய தத்துவம் ஆகும்.

மனிதனின் உடல் ஓர் ஆலயத்துக்கு ஒப்பானது. மனித உடலாகிய ஆலயத்தில் ஆறு ஆதாரங்கள் அமைந்திருக்கின்றன என்று நமது யோகசாஸ்திரம் குறிப்பிடுகிறது. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்று சொல்லப்படும் அந்த ஆறு ஆதாரங்களும் உடம்பின் கீழ்ப்பகுதியிலிருந்து நெற்றிவரையில் அமைந்துள்ளன. மூலாதாரத்தில் சுருண்டு படுத்திருப்பதைப் போன்று உள்ள குண்டலினி சக்தி எழுச்சி பெற்று



ஒவ்வோர் ஆதாரத்திற்கும் வரும்போது வெவ்வேறு விதமான புதிய ஆன்மிக அனுபவம் உண்டாகிறது. இந்த வெவ்வேறான அனுபவம் ஒவ்வொன்றும் புதிய ஒரு முகத்தைக் கொண்டு பார்ப்பது போன்றது. ஏழாவது ஆதாரத்திற்குச் சகஸ்ராரம் என்று பெயர். ஜீவன் அங்கே செல்லும்போது ஜீவன் என்னும் உணர்வை இழந்துவிடுகிறது. சுத்தசிவத்தில் ஜீவன் அப்போது கலந்துவிடுகிறான். பிறகு ஜீவன் சிவகுமாரனாகிவிடுகிறான். ஆறு ஆதாரங்களும் முருகனின் ஆறுவிதமான செயல்களில் ஈடுபடும் ஆறு முகங்களுக்கு ஒப்பானவை ஆகும். இந்த ஆறு ஆதாரங்களை முருகப்பெருமானின் ஆறு படைவீடுகள் என்றும் சொல்வதுண்டு.

பகவான் என்னும் சொல்லுக்கு, ஆறு விதமான தெய்விகக் குணங்களைக் கொண்டவன் என்பது பொருள். ஞானம், வைராக்கியம், வீரியம், ஐசுவரியம், ஸ்ரீ, கீர்த்தி என்று சொல்லப்படும் இந்த ஆறு தெய்விகக் குணங்களும் எவனிடத்து ஒன்று

சேர்ந்து இருக்கின்றனவோ அவனே பகவான். இந்த ஆறு குணங்களுள் ஒரே ஒரு குணம் சாதாரண ஜீவனிடம் சிறப்பாக அமைந்திருந்தால் அவன் மகிமை பொருந்தியவனாக விளங்குவான். இந்த ஆறு தெய்விகக் குணங்களும் ஒருவனிடம் ஒன்று சேர்ந்து விளங்குமானால் அவன் முருகப்பெருமானாகவே ஆகிவிடுவான்.

### ஆறு முகம்

முருகப்பெருமானின் ஆறு திருமுகங்களும் வெவ்வேறு விதமான ஆறு காரியங்களைச் செய்கின்றன. ஒரு முகம் உலகம் எங்கும் பரந்திருக்கும் இருளை எல்லாம் போக்கி ஒளி தருகிறது. சூரியன், சந்திரன், நெருப்பு என்னும் இம்மூன்றும் உலகிலுள்ள இருளைப் போக்கும் மூன்று சுடர்களாக விளங்குகின்றன. இந்த மூன்று சுடர்களுக்கும் ஒளியை வழங்கும் அருட்செயலை முருகப்பெருமானின் இந்தத் திருமுகமே செய்வதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இரண்டாவது திருமுகம் தம்மிடம் பக்தி செலுத்தும் அன்பர்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைக்கிறது.

ஒரு முகம் உலக நன்மைக்காக இயற்றப்படும் வேள்விகளுக்கு இடையூறு நேராமல் வெற்றிகரமாக நடந்தேற அருள்பாலிக்கிறது.

ஞானபண்டிதன் என்பது முருகப்பெருமானுடைய இன்னொரு பெயர். ஞானமே உருவான முருகன் பக்தர்களுக்குத் தோன்றும் ஐயங்களைப் போக்கித் தெளிவிப்பவன். அந்தச் செயலை ஒரு முகம் இயற்றுகிறது.

ஒரு முகம் தீமையை அழித்து நன்மையைச் செய்கிறது.

முருகனின் அழகிய மற்றொரு முகம் ஆன்மாக்களுக்கு இன்பத்தை வழங்குகிறது.

தமிழ்ப்பெருமக்கள் தீமைகளைப் போராடி அழிக்கும் வல்லமை பெற்ற கடவுளாக முருகனை வழிபட்டனர். அது காரணமாக அந்தப் பெருமான் 'கந்தன்' எனப்பட்டான். கந்தம் என்றால் தோள். வலிமைக்கு அடையாளமாகத் தோள் விளங்குகிறது.

கந்தன்—கந்து—பற்றுக்கோடு: கந்தம் என்பதன் திரிபு. உயிர்களுக்கெல்லாம் தனிப் பற்றுக்கோடாக இருக்கிறவன் எவனோ அவன்தான் இறைவன்.

### வேல்

**வேல்** முருகனுக்கே உரிய ஆயுதம். அஞ்ஞானம், ஆணவம் முதலிய தீய குணங்களின் உருவமாக விளங்கும் அசுரர்களை அழிப்பதே அதன் தொழில். சூரன் என்பவன் அகங்காரத்தின் வடிவம். கிரௌஞ்சாசுரன் என்பவன் மமகாரத்தின் ('என்னுடையது' என்ற பற்றின்) வடிவம். இந்த இரண்டு அசுரர்களின் அசுரத்தன்மையை அழித்து முருகப்பெருமான் அவர்களுக்குத் தெய்வத்தன்மையைக் கொடுத்தான் என்பது புராண வரலாறு.

சூரன் மலையைத் தனக்குக் கவசமாகக் கொண்டு கடலுக்குள் ஒளிந்துகொண்டான். முருகப்பெருமான் தம் கையிலுள்ள ஞானசக்தியாகிய வேலை விடுத்தான். அதனால் கடல் காய்ந்து வற்றிவிட்டது. ஆகவே சூரனும், சூரனுக்குக் கவசம் போன்றிருந்த மலையும் அழிந்தன. ஞானவேல், அசுரனிடம் இருந்த அசுரத்தன்மையை அழித்தது. அசுரனுக்கு முருகன் மறக் கருணையினால் தெய்வத்தன்மையை அளித்து ஆட்கொண்டான். அந்த அசுரனே பிறகு முருகனின் மயில்வாகனமாக ஆகி, எப்போதும் இறைவனுடன் வாழ்கிறான். 'நாம் இப்போது எப்படி இருந்தாலும் ஒரு சமயம் இறைவன் நம்மை ஆட்கொள்வான். தனக்குப் பகையாக இருந்த சூரனையே ஆட்கொண்டு மயிலாக வைத்திருக்கிறானே! அத்தகைய அருள்மிகு பெருமான் நம்மை ஆட்கொள்ளாமலா போய்விடுவான் ?' என்ற நம்பிக்கையின் சின்னமாகத்தான் மயில் விளங்குகிறது.

முருகன் ஞானபண்டிதன். அவன் தன் அடையாளமாக ஞானவேலைக் கையில் ஏந்தியுள்ளான். முருகப்பெருமானின் ஆலயங்கள் சிலவற்றில் மூலஸ்தானத்தில் முருகனின் உருவத்திற்குப் பதிலாக வேலைப் பிரதிஷ்டை செய்திருப்பதைக் காணலாம். மாணிக்கவாசகர் சிவபுராணத்தில் இறைவனை 'ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!' என்கிறார். இறைவனைப் பற்றிய அவருடைய கருத்துக்கு ஏற்றாற்போல் இந்த ஞானவேல் அமைந்திருக்கிறது. வேலின் கீழ்ப்பாகம் நீண்டு ஆழ்ந்திருக்கிறது. நடுப்பாகமோ அகன்றிருக்கிறது. மேற்பாகம் குறுகி நுண்ணியதாகவும் கூர்மையாகவும் இருக்கிறது ஆழ்ந்து பரந்த மிகக் கூர்மையான ஞானத்தை உடைய ஞானபண்டித சுவாமிக்கு வேல் மிகச் சிறந்த அடையாளமாகத் திகழ்கிறது.

விஷத்தைக் கக்கும் தன்மையை உள்ளது பாம்பு. அதற்குக் கருடனும் மயிலும் பகைவர்களாக இருக்கிறார்கள். முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் மயில் தன் காலின்கீழ்ப் பாம்பை மிதித்துக்கொண்டிருப்பதைக் காணலாம். நஞ்சைக் கொண்டிருக்கும் பாம்பை மயில் மிதித்துக்கொண்டிருக்கிறது. அந்த நச்சுப் பாம்பு சுருண்டு தன் கொடிய விஷத்தின் ஆற்றலை இழந்துவிடுகிறது. ஐந்து தலைகளை உடையது அந்த நாகம். ஐந்து இந்திரியங்களாகிய தலைகளை உடைய மனம் என்னும் நச்சுப் பாம்பு நம்முள் இருக்கிறதே! அது ஐம்புலன்களாகிய தலைகளின் மூலம் விஷத்தைக் கக்குகிறது. அது காரணமாக நமக்குத் துன்பங்களும் துயரங்களும் அளவில்லாமல் நாளும் பெருகுகின்றன.

நாகம் விஷத்தை மட்டும் கக்குவதில்லை. மாணிக்கமும் அதனிடமிருந்துதான் உண்டாகிறது. நாகம் நஞ்சைக் கக்காமல் நெடுங்காலம் பாதுகாத்து வைத்திருந்தால் அந்த நஞ்சே இறுகி மாணிக்கமாகிவிடுகிறது என்பர். நமது மனமாகிய நாகமும் ஐந்து இந்திரியங்களின் வாயிலாக நஞ்சைக் கக்காமல் இருக்குமானால், நஞ்சே அரிய மாணிக்கமாகிவிடும். அதாவது நமது மனம் நமக்குத் தீங்கு விளைப்பதற்கு மாறாக நன்மையை உண்டாக்கும். ஐந்து தலை நாகம் நஞ்சைக் கக்கிவிடாத வகையில் மயில் அதை அமிழ்த்தி வைத்திருக்கிறது. உலக மாயையிலே மனம் சிக்கிவிடுகிறது; மையல்பட்டு ஐந்து தலைகள் என்னும் ஐம்பொறிகளின் வாயிலாக நஞ்சைக் கக்குகிறது. அத்தகைய மனமாகிய நாகம் அமிழ்ந்து கிடக்கும் வகையில் முருகப்பெருமானின் மயில்வாகனம் நம் உள்ளத்தில் வந்துவிட்டால் போதும்; நஞ்சைக் கக்கும் இடமாகிய மனதிலே மாணிக்கமாகிய முருகப்பெருமானே எழுந்தருளி விடுவார்.

### மயிலின் தத்துவம்

முருகனின் வாகனமாகிய மயில் நீண்ட ஒரு பாம்பின் மேல் நிற்கிறது "இந்தப் பாம்பு மனிதனைப் பிணைக்கும் பந்தபாசங்களின் உருவகமே ஆகும். பிறவிக்குக் காரணமான பந்தபாசங்களால் மனிதன் கட்டுப்பட்டுத் தொல்லைகளுக்கு ஆளாகிறான். இந்தக் கட்டை அறுத்துக்கொண்டு விடுபட்டுவிட்டால்தான் மயக்கம் தீர்ந்து உண்மையறிவு உண்டாகும். சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கும் பாம்பைக் குத்திக் கொன்றுவிடுவது மயில். மயில் ஓங்காரத்தின் வடிவம். பந்தபாசங்களிலிருந்து விடுபட ஓங்கார மந்திரத் தியானமே வழி. பிரணவ மந்திரத்தை நாள்தோறும் ஜபித்தால் பாசங்களிலிருந்து விடுபட்டு இறைவனை வணங்கும் ஞானம் உண்டாகும். எல்லா மந்திரங்களுக்கும் மூலம் பிரணவம்.

### சேவற்கொடியோன்

சேவல்கொடி அருள்மிகு முருகனின் வெற்றிக் கொடியாகத் திகழ்கிறது. சேவலை நினைத்த மாத்திரத்திலேயே புற இருளை நீக்கும் சூரியனின் நினைவும் இயல்பாக வருகிறது. முருகனிடம் அன்பு கொண்டவர்களுக்கு அஞ்ஞான இருளை அகற்றும் ஞான சூரியனாகிய முருகப்பெருமானின் நினைவு வரும். 'அஞ்ஞானத்தில் ஆழ்ந்து தூங்காதீர்கள்! எழுந்திருங்கள்!' என்று அறைகூவுதலையே சேவற்கொடி உணர்த்துகிறது.

சக்தி, சிவனிடமிருந்து தோன்றியவுடன் முதன் முதலாகத் தோன்றியது நாததத்துவம். அந்த நாத தத்துவத்தின் புறச்சின்னமாகவே சேவல் விளங்குகிறது. பிறகுதான் எஞ்சியுள்ள ஏனைய எல்லாத் தத்துவங்களும் வெளிப்பட்டன.

அதிகாலையில் கோழி கூவும்போது உலகத்தின் புற இருள் விலகிப் பொழுது விடிகிறது; அஞ்ஞான இருள் நீங்கி ஞான ஒளி பிரகாசிப்பதற்கு அடையாளமாகக் கூவும் கோழிக்கொடி முருகனின் கையில் உள்ளது.

### பழனி ஆண்டவர்

ஆன்மிக வளர்ச்சிக்கு வைராக்கியம் மிக அவசியம். வைராக்கியம் உள்ளவனே உண்மையை உள்ளபடியே உணர்ந்துகொள்ளக்கூடியவன். அவன்தான் உண்மையான தீரன். வைராக்கியம் இல்லாதவர்களைப் 'பாலில் ஊறிய அவல் போன்றவர்; எதற்கும் உதவாதவர்' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் குறிப்பிட்டார். வைராக்கியமே ஞானத்தின் முதற் படி. ஞானத்தைக் கொடுக்கும் முருகன், சிவபெருமானைப் போலவே வைராக்கியத்தின் சிறந்த சின்னமாக விளங்குகிறான். இந்துத் தெய்வங்களுள் துறவீத் தெய்வங்களாகச் சிவனும் சிவகுமாரனும் விளங்குகிறார்கள்.

முருகன் பழனிமலையில் கௌபீனம் தரித்து உருத்திராக்கம், விபூதி முதலியவற்றுடன் வைராக்கியத்தின் சின்னமாகத் துறவியாக விளங்குகிறான்.

வள்ளி, தேவயானையுடன் முருகன் விளங்கும் திருக்கோலமும் உண்டு. வள்ளி - தேவயானை விளக்கும் தத்துவங்களைக் கடந்த ஆண்டில் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் ஜூன் இதழில் வெளியிட்டுள்ளது. ஆகவே அந்தத் தத்துவங்கள் இக்கட்டுரையில் இடம் பெறவில்லை. ★




# நல்ல எண்ணத்தினுல் ஏற்பட்ட நன்மை

விநோதமான ஓர் இஸ்லாமியக் கொள்ளைக்காரன் இருந்தான். துறவிகளைப் போன்ற வேடம் அணிந்துகொண்டு கையில் ஒரு ஜபமாலையும் வைத்திருந்தான். அவன் கொள்ளையடிப்பான். கொள்ளையடித்த பொருளில் பாதிக்கு மேல் ஏழை எளியவர்களுக்குத் தந்துவிடுவான். அது மட்டுமின்றி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தவருமல் நமாஸ் படித்து வந்தான். அவன் தன் கூட்டாளிகள் அனைவருக்கும் அவசியம் நமாஸ் படிக்க வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தான். அவ்விதம் அவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் எவனுவது நமாஸ் வெள்ளிக்கிழமை படிக்காவிட்டால் அவனை அந்தக் கூட்டத்திலிருந்தே தலைவன் வெளியேற்றிவிடுவான்.

ஒரு நாள் சில வியாபாரிகள் கூட்டமாகச் சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் சென்ற அதே பாதையில்தான் கொள்ளைக்காரன் தன் கூட்டாளிகளுடன் வாழ்ந்து வந்தான். திருடர்கள் வியாபாரிகளைத் தாக்கிக் கொள்ளையடிக்கத் தொடங்கினுர்கள். ஒரே ஒரு வியாபாரி மட்டும் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பிவிட்டான். அவன் தன்னிடமிருந்த பணத்தைப் பாதுகாப்பாக வைக்க விரும்பிப் பணப்பையுடன் ஒரு கூடாரத்தை நோக்கி ஓடிச் சென்ருன்.

வியாபாரி சென்றடைந்த கூடாரம் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனுடையதே ஆகும். தலைவனே அப்போது பக்கிரி வேடத்துடன் ஜபமாலையைக் கையில் வைத்துக் கொண்டு ஜபம் செய்வது போல் பாசாங்கு செய்துகொண்டிருந்தான். இதை அறியாத வியாபாரி அந்த இஸ்லாமியத் துறவியிடம், "சுவாமி! பெரிய ஆபத்து வந்துவிட்டது. திருடர்கள் எங்களைக் கொள்ளையடிக்கிருர்கள். தயவு செய்து இந்தப் பணமூட்டையைத் தாங்கள் வைத்திருங்கள். சிறிது நேரம் கழித்துப் பிறகு வந்து எடுத்துச் செல்கிறேன்!" என்று வேண்டினுன்.

கொள்ளைக்கூட்டத் தலைவன் ஒரு துறவியின் பெருந்தன்மையோடு, "அதோ, அந்த மூலையில் வைத்துவிட்டுப் போ!" என்று சொன்னுன்.

வியாபாரி நிம்மதியுடன் பணப்பையைத் துறவி காட்டிய மூலையில் வைத்துச் சென்றுவிட்டான்.

சிறிது நேரம் சென்றது. அதற்குள் கொள்ளைக் கூட்டத்தினர் வியாபாரிகள் அனைவருடைய பொருளையும் சுத்தமாகக் கவர்ந்துகொண்டு ஓடி மறைந்துவிட்டார்கள்.

வியாபாரி பணப்பையை எடுத்து வருவதற்காகப் புறப்பட்டான். கூடாரத்தை அடைந்தான். கூடாரத்தினுள் எட்டிப் பார்த்த வியாபாரிக்கு உடல் நடுங்கத் தொடங்கியது. அப்படி அவன் அங்கே என்ன காட்சியைக் கண்டான்!

கூடாரத்திற்குள் கொள்ளைக்காரர்கள் இருந்தார்கள். அவர்கள் கொள்ளையடித்து வந்திருந்த பொருள்களைப் பங்கிட்டுக் கொண்டிருந்தனர். வியாபாரி, 'கொள்ளைக்கார னிடமே என் பணத்தைப் பாதுகாப்பிற்காக விட்டுச் சென்றேனே!' என்று நினைத்துத் தன் அறியாமைக்காக வருந்தினுன். மெல்ல மெல்ல அந்த இடத்தை விட்டு நழுவினுன்.

தலைவன் வியாபாரியை அழைத்து, "இங்கே எப்படி வந்தாய்?" என்று கேட்டான்.

வியாபாரி நடுங்கிக்கொண்டே, "ஐயா! ஐயா! நான் பாதுகாப்பாக விட்டுச் சென்ற பணமூட்டையைத் திரும்பப் பெறுவதற்காக வந்தேன். ஆனுல் நான் செய்த தவறு புரிந்துவிட்டது. எனவே திரும்பிச் செல்கிறேன்" என்ருன்.

"நில்" என்று கட்டளையிட்ட தலைவன் வியாபாரியைப் பார்த்து, "நீ பாதுகாப்பிற் காக வைத்த பொருளை எடுத்துச் செல்! அது அங்கேயே கிடக்கிறது பார்" என்ருன்.

வியாபாரிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. கழுத்தை வளைத்துத் திரும்பிப் பார்த்தான். தான் வைத்துச் சென்ற பை அதே இடத்தில் இருந்தது. மிக்க மகிழ்ச்சியோடு பணமூட்டையுடன் தப்பித்தோம், பிழைத்தோம் என்று அந்த இடத்தை விட்டு அகன்ருன்.

தலைவனின் செயலைக் கண்ட மற்றக் கூட்டாளிகள் அதை விரும்பவில்லை. ஆகவே அவர்கள் தலைவனிடம், "கைக்கு வந்த பொருளை ஏன் நழுவவிட்டீர்கள்? தாங்கள் செய்தது கொஞ்சமும் சரியில்லை" என்று கூறினர்.

தலைவன் அமைதியுடன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் அனைவரும் சொல்வது சரிதான்! ஆனுல், அந்த வியாபாரி என்னைக் கடவுளிடம் உண்மையான பக்தி கொண்டவனுகவும், நேர்மையானவனுகவும் கருதி அல்லவா தன் பொருள்களை விட்டுச் சென்ருன்? கடவுளை மகிழ்விக்கச் செய்யும் இந்தத் துறவி வேடத்திற்கான எந்த நற்குணம் தேவையோ அந்த நற்குணத்தை நான் கடைப்பிடிக்க வேண்டாமா? கடவுள் என்னை எப்போதும் நல்லெண்ணம் உடையவனுக ஆக்கட்டும்" என்று சொல்லி முடித்தான்.

இதே கொள்ளைக் கூட்டத் தலைவன் கடவுளின் அருளால் பிற்காலத்தில் 'பஜல் அயாஜ்' என்ற பிரசித்தி பெற்ற மகாத்மாவாக மாறினுன். இஸ்லாமிய உலகின் போற்றுதற்குரிய அந்த ஞானியின் வாழ்க்கை பல சாதகர்களுக்கும் ஊக்கம் தருவதாக அமைந்தது. அவரை இஸ்லாமிய உலகின் வால்மீகி எனலாம்.



# விதுர நீதி

'நம்பி'

மதம் கொண்டவன், கவனக் குறைவுள்ளவன், பித்தன், களைப்படைந்து இருப்பவன், கோபக் காரன், பசித்தவன், அவசர புத்தியுள்ளவன், லோபி, பயந்தவன், காமி—ஆகிய பத்துப் பேரும் தருமத்தை அறியமாட்டார்கள்.

எந்த அரசன் காமக் குரோதங்களை முழுவதும் விடுத்து, சத்பாத்திரத்தில் தானம் செய்து, சிறப்புகளை அறிந்து, சாஸ்திரத்தைக் கற்று, காரியங்களை விரைந்து செய்கிறானோ, அவனை எல்லா மனிதர்களும் பின்பற்றி நடக்கிறார்கள்.

தன்னிடம் பிறருக்கு நம்பிக்கை ஏற்பட வழி தெரிந்தவன், அறிந்து குற்றம் செய்பவர்களைத் தண்டிப்பவன், தண்டனையின் அளவை அறிந்தவன், பொறுமையுள்ளவன் ஆகியவர்களிடத்தில் நிரம்பச் செல்வம் சேர்கிறது.

பகைவரின் குறைபாடுகளை விழிப்புடன் கவனிப்பவன், அறிந்து பகைவனை அடுப்பவன், பலமில்லாத பகைவனையும் அலட்சியம் செய்யாதவன், பலசாலிகளோடு போர் செய்ய விரும்பாதவன், தக்க சமயத்தில் தன் ஆற்றலை வெளிப்படுத்தத் தெரிந்தவன் ஆகியவர்களே தீரர் ஆவர்.

காரியத்தைத் துரிதமாகச் செய்பவன், ஆபத்து நேர்ந்தபொழுதும் மனம் கலங்காதவன், காரியங்களைக் கவனத்தோடு செய்பவன், துயரம் நேர்ந்த பொழுது பொறுமையுடன் இருப்பவன் ஆகியவர்கள் பகைவரை வெல்லும் மகாத்மா ஆவர்.

பயனற்ற தேச சஞ்சாரம், பாவிகளுடன் சேர்க்கை, பிறன் மனைவியை அணையாமை, பகட்டு, திருட்டு, கோள் சொல்லுதல், குடி இவற்றைச் செய்யாதவன் எப்போதும் சுகமாக வாழ்வான்.

மூடனைத் தவிர்த்து, மற்றவர்கள் அறம் பொருள் இன்பம் பற்றிய காரியங்களைப் படபடப்புடன் தொடங்கமாட்டார்கள். அழைத்துக் கேட்டால் உண்மையையே சொல்வார்கள். நண்பனுடைய காரியங்களில் விவாதம் செய்ய மாட்டார்கள். தம்மைப் பிறர் போற்றுவிட்டால் அதற்காகக் கோபம் கொள்ளமாட்டார்கள். எவன் பொறுமை அற்றவனாக இருக்கிறானோ, தயை காட்டுகிறானோ, பலம் இல்லாதபோது விரோதம் செய்துகொள்ளாமல் இருக்கிறானோ, எதையும் மிகைப்படுத்திச் சொல்வதில்லையோ, விவாதத்தைப் பொறுத்துக்கொள்கிறானோ, அவனே எப்போதும் புகழோடு வாழ்வான்.

எவன் தன் கர்வத்தை வெளிப்படுத்தும் வேடத்தை அணிவதில்லையோ, தன் ஆண்மையைக் குறித்துத் தற்புகழ்ச்சி செய்துகொள்வதில்லையோ, கடுமையான வார்த்தைகளைப் பேசித் தன்னை மிஞ்சினவனாகக் காட்டிக்கொள்வதில்லையோ அவனை எல்லா மக்களும் நேசிப்பார்கள்.

அடங்கிப்போன கோபத்தை வளர்க்காதவன், கொழுப்பு இல்லாதவன், பொறுமையுள்ளவன், வறுமை காரணமாகச் செய்யத்தகாத காரியத்தைச் செய்யாதவன் – இத்தகையவனை மேன்மையான சீலமுள்ளவன் என்று சான்றோர் கூறுவர்.

தனக்குச் சுகம் ஏற்பட்டபோது மகிழ்ச்சி அடையாதவன், பிறருக்குத் துன்பம் ஏற்பட்டபோது மகிழ்ச்சி அடையாதவன், கொடுத்துவிட்டுப் பிறகு வருந்தாதவன்—இத்தகைய பண்புகளைக் கொண்டவன் புகழத்தக்க ஒழுக்கமுடையவன் ஆகிறான்.

பிற தேசத்தவரின் ஆசாரம், கொள்கைகள், சாதிய நெறிகள் ஆகியவற்றையும் ஏற்றத் தாழ்வுகளையும் அறிந்துகொண்டு இருப்பவன் முன்னுக்கு வருகிறான். அவன் எங்கே போனாலும் அவனுக்கு மக்களுடைய ஆதரவு கிடைக்கும்; அவன் மக்களுக்குத் தலைவனாகவும் ஆகிவிடுகிறான்.

பகட்டு, மோகம், மாத்சரியம், பாவச்செயல், ராஜத் துவேஷம், கோள் சொல்லுதல், மக்கள் கூட்டத்தைப் பகைத்துக்கொள்ளல், மதம் கொண்டவர், பித்தர், தீயவர் ஆகியோரின் பேச்சைக் கேளாமலிருத்தல் – ஆகிய பண்புகளை உடையவனே அறிஞனாகவும் மேன்மையாளனாகவும் திகழ்கிறான். ★

# பெரிய புராணம்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்



சேக்கிழார் அருளிய பெரிய புராணம் சைவத்திரு முறைகளில் பன்னிரண்டாவதாகக் கோக்கப்பெற்றுள்ளது. அதற்குச் சேக்கிழார் வைத்த பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. பெரிய புராணம் தொகை, வகை, விரி என்ற மூன்றுவகை நூல்களில் விரி என்ற வகையைச் சாரும்.

"அடியவர்
தென்று சீர்த்திருத் தொண்டத் தொகைவரி
இன்றேன் ஆதர வால்இங்கு இயம்புகேன்."
—திருமலைச் சிறப்பு, 37

என்று சேக்கிழாரே இதனைப் புலப்படுத்துகிறார்.

இதற்குத் தொகைநூல் சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிய திருத்தொண்டத் தொகை. அதன் வகை நூலாக வந்தது நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத் தொண்டர் திருவந்தாதி.

மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராணர் அருளினால்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகைஎனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம்.

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தம் நாதனும் நம்பியாண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாமல் இயம்புவாம்.
—திருமலைச் சிறப்பு, 38,39.

என்று சேக்கிழாரே இதைச் சொல்கிறார். தொகை நூலும், வகைநூலும் திருத்தொண்டத் தொகை, திருத் தொண்டர் திருவந்தாதி என்று வழங்குவதனால் விரிநூலாகிய இதற்கும் திருத்தொண்டர் புராணம் என்று பெயர் வைத்தார் ஆசிரியர். சேக்கிழார் இந்த நூலுக்கு வைத்த பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதை அவர் திருவாக்காலே உணரலாம்.

இங்கிதன் நாமம் கூறின்
இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள்
சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்
புறஇருள் போக்கு கின்ற
செங் கதி ரவன்போல் நீக்கும்
திருத் தொண்டர் புராணம் என்பாம்.
—பாயிரம், 10.

இந்தப் பெயரை வேறு பெரியவர்களும் எடுத்துச் சொல்வார்கள்.

"சீருருந் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்து"

என்று சேக்கிழார் புராணத்தில் வருகிறது.

"தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழில் மேலாந் தரம்"

என்ற தனிப்பாடலும் இந்தப் பெயரைக் காட்டுகிறது.

ஆனால் இன்று யாவருமே இந்தப் புராணத்தைப் பெரிய புராணம் என்றே வழங்குகிறார்கள். சேக்கிழார் புராணத்தில்,

பெரிய புராணம் கேட்ட வளவர் பிரான்

என்று வருகிறது. சேக்கிழார் புராணத்தைப் பாடியவர் உமாபதி சிவம் என்ற பெரியவர். உமாபதி சிவாசாரியார் என்று சிலர் கொள்வர். அப்படி ஒரு சிறப்புப் பாயிரங்கூட உண்டு. ஆயினும் சேக்கிழார் புராணம் பாடிய உமாபதிசிவம் வேறு என்றே அறிஞர் கருதுவர். அவர் காலத்தில் பெரிய புராணம் என்ற பெயர் வழக்கில் வந்துவிட்டதென்று தெரிகிறது.

திருத்தொண்டர் புராணத்தைப் பெரிய புராணம் என்று வழங்குவதற்கு என்ன காரணம்? பலர் பலவாறு கூறுவார்கள். மற்றப் புராணங்களைவிட இது அளவால் பெரியது என்று சொல்வதற்கில்லை. கந்த புராணம் இதைவிடப் பெரியது.

பெரிய புராணத்தில் ஒவ்வொரு நாயனாரின் வரலாற்றையும் ஒவ்வொரு புராணமென்றே கொள்ளும்படி பெயர் அமைத்திருக்கிறார் சேக்கிழார். தில்லைவாழந்தணர் புராணம், திருநீலகண்டநாயனார் புராணம் என்பவை போலப் பெயர்கள்

உள்ளன. ஆகவே, பல புராணங்களைத் தன்பால் கொண்டிருத்தலினால் இதற்குப் பெரிய புராணம் என்று பெயர் வந்தது என்பது ஒரு காரணம்.

பெரியவர்களாகிய நாயன்மாரைப் பற்றிய புராணமாதலின் அந்தப் பெயர் வந்தது என்பது மற்றொரு காரணம்.

''அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்''
''தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்''

என்னும் இடங்களில் சேக்கிழார் அடியார்களின் பெருமையை, 'அளவிலாத பெருமை' என்றும், 'தெரிவரும் பெருமை' என்றும் குறிப்பிடுவார். அடியவர்களைப் பெரியவர்களாகச் சொல்வதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். இறைவனைவிடப் பெரியவர்கள் என்றும் சொல்வதுண்டு. ஔவையார் பாடிய பாட்டு ஒன்றில், ''பெரியது கேட்கின் ...... பெரிது பெரிது புவனம் பெரிது .... இறைவன் தொண்டர் உள்ளத்து அடக்கம்; ஆதலின் தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்று வருகிறது. இறைவன் யாவரிலும் பெரியவன்; அவனைத் தம் உள்ளத்தில் அடக்கியதால் தொண்டர்கள் அவனைவிடப் பெரியவர்கள் என்று சமற்காரமாக அந்தப் பாடல் சொல்கிறது. ஆனால் அப்படி அலங்காரமாகச் சொல்வதைக் காரண காரியக் கண்கொண்டு பார்த்தால் தவறாகத் தோன்றும்.

தொண்டர் உள்ளத்தில் இறைவன் இருப்பது உண்மைதான். ஆனால் அதற்குள்ளே அடங்கி விட்டானா? இருப்பது வேறு, அடங்குவது வேறு. அடங்கும் பொருள் அடக்கிய இடத்துள்ளே மட்டும் இருக்குமேயன்றி வேறிடங்களில் இராது. தொண்டர் உள்ளத்தில் அடங்கியவன் வெளியில் இல்லையா? ஒரு தொண்டர் உள்ளத்தில் அடங்கியவன் வேறொரு தொண்டர் உள்ளத்தில் எப்படி இருக்க முடியும்? ஒரே சமயத்தில் சென்னையில் ஓர் அறையில் அடங்கியிருப்பவன், அதே சமயத்தில் கோவையில் ஓர் அறையில் இருக்க முடியுமா? 'இறைவன் அகடித கடனா சாமர்த்தியம் உடையவனாதலால், ஒரே சமயத்தில் பல இடங்களில் இருப்பான்' என்று சொல்லலாம். அப்போது அவன் ஓரிடத்தில் அடங்கினான், அவனைத் தம் உள்ளத்தில் ஒரு தொண்டர் அடக்கிவிட்டார் என்று சொல்லலாமா? இப்படி ஆராய்ந்துகொண்டே போனால், 'தொண்டர் உள்ளத்துள் இறைவன் அடங்கி நிற்கிறான்' என்பதை அறிவு ஒப்பும்படி நிறுவ முடியாது. எங்கும் வியாபகமாக உள்ள பொருள் அவன்.

'அப்படியானால் அடியார்கள் ஆண்டவனைவிடப் பெரியவர்கள் என்ற கருத்தை ஏற்றுக் கொள்வது தவறா?' என்ற கேள்வி எழலாம்.

புராணங்கள் பெரும்பாலும் இறைவன் புகழைப் பேசுபவையே. அவற்றை இந்த நாட்டினர் போற்றினார்கள். பாரதியார்கூடப் புராணங்களையும், 'கருதுகின்ற பேரொளிகாண், காலங் கொன்ற விருந்துகாண், கடவுளுக்கோர் வெற்றி காணே' என்று பாராட்டுகிறார். திருத்தொண்டர் புராணம் பெரிய புராணம் ஆனால், அதன்முன் ஏனைய புராணங்கள் சிறிய புராணங்கள் ஆகிவிட்டன. அந்தப் புராணங்களின் பெருமை குறையவில்லை. ஆனால் அவற்றைவிட அதிகப் பெருமையை உடைய வேறு ஒரு புராணம் வந்துவிட்டமையால் அவற்றின் பெருமை சிறியதாகப் படுகிறது.

மாமன்னர் அக்பரின் அவைக்களத்தில் பீர்பல் என்ற அறிஞர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த அறிவுத்திறமையுடையவர். ஒரு நாள் மன்னர் ஒரு வண்ணக்கட்டியால் ஒரு கோடு போட்டு, ''இதை அழிக்காமலே சிறியதாக்க வேண்டும்'' என்று சொன்னாராம். உடனே பீர்பல் அந்த வண்ணக் கட்டியை வாங்கி, மன்னர் போட்ட கோட்டுக்கு அருகில் அதைவிடப் பெரிய கோடு ஒன்று போட்டு, ''பாதுஷா அவர்கள் வரைந்த கோடு சிறியதா, பெரியதா?'' என்று கேட்டார். தன் பக்கத்தில் தன்னைவிடப் பெரிய கோடு வந்ததனால் மன்னர் போட்ட கோடு தன் அளவில் குறையாமலே சிறியதாகிவிட்டது.

அப்படியே பெரிய புராணம் வந்தபிறகு மற்றப் புராணங்கள் சிறியவை ஆகிவிட்டன; அப்படிச் சொல்வதைவிடச் சிறியவையாகத் தோற்றம் அளிக்கின்றன என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்.

இறைவன் பெருமை குறையவில்லை; தொண்டர் பெருமைக்கு முன் அந்தப் பெருமை எடுபடவில்லை. காரணம் என்ன? இறைவனுடைய புராணங்கள் நம்பிக்கை காரணமாகப் பெருமைபெற்றன. அந்தப் புராணங்களில் வரும் நிகழ்ச்சிகள் யாவும் நடந்தனவா என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாது. ஆனால் திருத்தொண்டர் வரலாறுகளோ உண்மையில் நிகழ்ந்தவை. ஆதலின் அந்த வரலாறுகளில் மக்களுக்கு நம்பிக்கை உண்டாகிறது. புராணம்

என்ற பெயரை உடையதாக இருந்தாலும் அது வரலாறுகளை அடிப்படையாக வைத்து இயற்றப் பட்ட காவியம். வேறு எந்த நூலின் மொழி பெயர்ப்பும் அன்று.

மற்றொரு வகையில் தொண்டர்தம் பெருமை இறைவன் பெருமையைவிட உயர்ந்தது என்று சொல்லலாம். இறைவனுடைய பெருமைகள் அளவிலாதன. அவற்றை நாம் உணர்ந்தோ ஓதியோ அறிய முடியாது. அதனால் அவை யாவும் உண்மையோ என்ற ஐயம்கூடச் சில சமயங்களில் நமக்கு எழுவதுண்டு. அடியார்கள் வரலாற்றைப் பார்க்கும்போது, இந்த உலகத்தில் நம்மைப் போலத் தோன்றி, உயர்நிலைக்கு வந்தவர்கள் என்ற அபிமானம் உண்டாகிறது. இன்றும் சிறந்த அடியார் களும் ஞானிகளும் இருக்கிறார்கள். நம்மால் செய்ய முடியாத செயல்களை அவர்கள் செய்வதை நேரிலே பார்க்கிறோம். அவர்களுடைய புலனடக்கமும் தவமும் அவர்களை நம்மினும் பல மடங்கு சிறந்த வர்களாக உயர்த்தியிருப்பதை நாம் தெளிவாக அறிந்துகொள்கிறோம். அவரைக் கண்ட பிறகு, இறைவன் இருக்கிறான் என்பது உண்மை என்றும், அவன் அருளால் கிடைக்கும் அனுபவம் பெரிதென் றும், அதனால் உண்டாகும் அற்புத விளைவுகள் பல என்றும் உணர்ந்துகொள்கிறோம். விளக்கானது தன்னைக் காட்டிக்கொண்டு தன் ஒளியால் பிற பொருள்களையும் காட்டுவது போல, அடியார்களும் ஞானிகளும் தம்முடைய பெருமையை உணர்த்து வதோடு கடவுளுண்மையையும் உணரும்படி செய் கிறார்கள். அவர்கள் நம்மால் அணுகும் நிலையில் இருக்கிறார்கள். அதனால் நம்மால் அணுகுவதற்கு அரிய இறைவனைவிட அவர்கள் நமக்குப் பெரியவர் களாகிறார்கள். இறைவனைவிட இறைவன் திருவடி சிறந்தது என்று பரிபாடல் கூறுகிறது. "நின்னிற் சிறந்தன நின் தாளிணையவை" என்று வருகிறது. அளவுகாண முடியாத அவன் திருவுருவில் நாம் பற்றிக்கொள்வதற்கு உரியதாக இருப்பதால் அந்தத் திருவடி நமக்குச் சிறந்ததாயிற்று. அது போலவே ஆண்டவனைவிட அடியார்கள் சிறந்தவர்களாகத் தோன்றுகிறார்கள்.

பின்னும் ஒரு வகையில் அடியார் பெருமை இறை வன் பெருமையைவிடச் சிறந்தது என்பதைக் காட்டலாம்.

பெரிய புராணத்தில் திருக்கூட்டச் சிறப்பு என்ற பகுதியில் சேக்கிழார் அடியாரின் பொது இயல்பு களைத் தொகுத்துச் சொல்கிறார்.

கேடும் ஆக்கமுங் கெட்ட திருவினர்;
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்;
கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர்

என்பது, அந்தப் பகுதியில் வரும் ஒரு பாட்டு. 'இறைவனை வழிபட்டு அன்பு செய்து அதுவே பேரின்பமாக அனுபவித்து, இதைவிட வேறாகிய வீடும் வேண்டாம் என்று சொல்லும் நிலையை உடையவர்கள்' என்று அடியார்களின் பெரு மையைச் சொல்கிறார். இந்தக் கருத்தையே'

ஆனபய பக்திவழிபாடு பெறு முத்தியது
வாசநிகழ் பத்தஜன வாரக்காரனும்

என்று திருவகுப்பில் அருணகிரியார் கூறுகிறார். அன்பு அல்லது பக்தி என்னும் சாதனத்தினால் முக்தி என்னும் சாத்தியத்தை அடைய வேண்டும் என்றே பெரும்பாலும் சொல்வது வழக்கம். ஆனால் இந்த அடியார்களோ, இந்த அன்பையே இலட்சியமாகப் பெற்று அநுபவிக்கிறார்களாம். 'அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே' என்று திருமூலர் சொல்லுவதும் இங்கே நினைப்பதற்குரியது. முக்தியையும் தியாகம் செய்யும் பெரியவர்கள் அடியவர்கள்.

புறநானூற்றில் ஒரு பாட்டு வருகிறது.

ஈயென இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று.
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன்எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று

என்பது அந்தப் பாட்டில் ஒரு பகுதி. பின் இரண் டடிகளைக் கவனிக்க வேண்டும். ஒருவனுடைய நிலையை அறிந்து அவனுக்கு இது வேண்டு மென்பதைக் குறிப்பாக அறிந்து அதனை அவ னுக்குக் கொடுத்தல் உயர்ந்த செயல்; அதைச் செய்பவன் உயர்ந்தவன். 'இட்டார் பெரியோர்' என்று ஔவையார் சொல்கிறார். ஆனால் அவனை விட உயர்ந்தவனும் இருக்கிறான். ஒருவன், இதைக் கொள் என்று கொடுக்கும்போது, அதை வேண்டாம் என்று சொல்லி வாங்காமல் இருக்கிறானே, அவன் கொடுக்கப் புகுந்தவனைவிட உயர்ந்தவன்; அந்தத் தியாகம் சிறந்தது. கொடுப்பவனைத் தியாகி என்றால் அதைவிடப் பெரிய தியாகி, அதை வேண்டா மென்று மறுப்பவன்.

இந்தக் கருத்தையும், சேக்கிழார் திருத்தொண்டர் களைப் பற்றிக் கூறிய கருத்தையும் சேர்த்து வைத்துப் பார்க்கலாம். தொண்டர்கள் 'வீடும்

வேண்டா விறலின் விளங்கு'பவர்கள்; அதாவது முத்தியையே தியாகம் செய்பவர்கள்.

ஒரு பொருளை ஒருவருக்கு வழங்குவோருள் வேறுபாடு உண்டு. மிகுதியான பொருளை வழங்குபவன் பெரிய வள்ளல். எல்லாப் பொருள்களையும்விட உயர்ந்தது முத்தித்திரு. அதனை வழங்குகிற இறைவன் எல்லா வள்ளல்களிலும் உயர்ந்தவன். அதனால் அவனைத் தியாகராஜன் என்று வழங்குகிறோம். அவன் முத்தியை அடியார்களுக்குக் 'கொள் எனக் கொடுப்பதால்' உயர்ந்தவன். ஆனால் அப்படிக் கொடுக்க அவன் காத்திருக்கும்போது, 'அதன் எதிர், கொள்ளேன்' என்று சொல்பவன் பின்னும் உயர்ந்தவன் என்றுதானே கொள்ள வேண்டும்? புறநானூற்றுப் பாடல் அதைத்தானே சொல்கிறது? கொள் எனக் கொடுப்பவனைக்காட்டிலும் கொள்ளேன் என்பவன் உயர்ந்தவனானால், முக்தியை வழங்கும் இறைவனைவிட, அதை வேண்டாம் என்று மறுக்கும் விறலை உடையவர் பின்னும் உயர்ந்தவர், பெரியவர் என்று சொல்வதில் பிழை ஏது? ஆகவே, இறைவன் பெரியவன்; மேலே சொன்ன நியாயத்தால் அவனைவிடப் பெரியவர்கள் திருத்தொண்டர்கள். அதனால் இறைவன்புகழ்பேசும் நூல்கள் புராணம் ஆனால், அவனைவிடப் பெரியவர்களின் வரலாற்றைச் சொல்லும் புராணம் பெரிய புராணமாக விளங்குவது முறையே அல்லவா? ★

---



மனம் பிறழாது இறைநெறியில் ஆழ்ந்துவிடுபவனுக்குப் பதியுண்டு, நிதியுண்டு, புத்திரர்கள் மித்திரர்கள் புக்கமுண்டு, பவிசுண்டு, தவிசுண்டு, யமபடர் அணுகாக் கதியுண்டு, ஞானமாம் கதிருண்டு, கதிருண்டு, காயசித்திகள் உண்டு.

—தாயுமானவர்



நீங்கள் ஒரு மந்திரத்தைப் பதின்மூன்று கோடி முறை ஜபம் செய்தால் ஸ்தூல வடிவில் உங்கள் இஷ்டதெய்வத்தின் தரிசனம் கிடைக்கும். நீங்கள் இதனை நான்கு ஆண்டுகளில் செய்து முடிக்கலாம். இது அநேகருக்கு வேடிக்கையாகத் தோன்றலாம். ஆனால் இது உண்மை.

—சுவாமி சிவானந்தர்



படைப்புக்கும் காப்புக்கும் அழிவுக்கும் காரணமான தெய்வம் ஒன்றே. நீங்கள் காணும் எல்லாத் தெய்வங்களும் அந்தப் பரம்பொருளின் பல வடிவங்களே ஆகும். நீங்கள் விரும்பித் தொழும் எந்தத் தெய்வத்துக்கும் எல்லா வல்லமைகளும் உண்டு. இந்த மகத்தான் கடவுள்சக்தியை ரிக் வேதியர் **புத்தம்** என்று தொழுவர்; யஜுர் வேதியர் **வேள்வியில் தீ** என்று வழிபடுவர்; சாம வேதியர் **மகாவிரதம்** என்ற வேள்வியில் வழிபடுவர். எல்லா வழிபாடுகளும் அந்த ஒரே பரம்பொருளுக்கு உரியனவாகும்.

**—ஐதரேய ஆரண்யகம், 3-2-3.**



அற்பத்தனமுடையவன் தான் செய்யும் தாழ்ந்த செயலையோ, தான் கைக்கொண்ட அற்பப்பொருளையோ கண்டு பெரியோர் நகைப்பார்களே என்ற எண்ணம் சிறிதுமின்றிச் செயல் புரிவான். உதாரணமாக, நாய் ஓர் இறந்த கழுதையின் எலும்பைக் கடித்துக்கொண்டிருக்கிறது. அந்த எலும்பில் புழுக்கள் நெளிகின்றன. வாய் நீரால் நனைந்திருக்கிறது. துர்நாற்றம் வீசிக்கொண்டிருக்கிறது. அது அருவருக்கத்தக்க நிலையில் உள்ளது: மாமிசம் அதில் சிறிதளவுகூட இல்லை. ஆயினும், நாய் இணையற்ற சுவையை அதில் நுகர்ந்துகொண்டு நிற்கிறது. அருகில் இந்திரன் வந்து நின்றாலும் அவனைக் கவனிக்காமல் கண்களை மூடி எலும்பைக் கடித்துக்கொண்டிருக்கிறது.

—பர்த்ருஹரி (நீதிசதகம்)

அருள்நெறிக் கதை:

# இறைவனின் திருநாமம்

சத்தியகாமன்



ஸ்ரீகிருஷ்ண சைதன்யரின் சீடர்களின் காலத்திலிருந்து வழிவழியாக வழங்கி வரும் ஒரு கதை இது:

வெகு காலத்திற்கு முன்பு ஒரு சிறிய கிராமத்தில் ஏழைப் பிராம்மணன் ஒருவன் மனைவியுடன் வாழ்ந்து வந்தான். அவன் தெய்வபக்தி கொண்டவன்; நல்லொழுக்கங்கள் நிரம்பப் பெற்றவன்.

பிராம்மணன் ஏழைதான்; ஆனால் அவன் பொருளாசை இல்லாதவன்; போதும் என்ற மனம் கொண்டவன். தனது சொற்ப வருவாயைக் கொண்டு எளிய வாழ்க்கை வாழ்ந்தான். தன்னால் இயன்ற மட்டில் ஏழை எளியவர்களுக்கும் திக்கற்றவர்களுக்கும் உதவி செய்தான். சாதுக்களுக்குத் தொண்டு செய்தான். இந்த வகையில் அவனுக்கு வரவுக்கு ஏற்ற செலவும் இருந்து வந்தது.

ஆனால் பிராம்மணனின் மனைவி கணவனின் குண நலன்களுக்கு நேர்மாறாக இருந்தாள். அவளுக்கும் போதும் என்ற மனதுக்கும் உள்ள தூரம் மிக அதிகம். அவள், மேலும் மேலும் பணம் சேர்க்க வேண்டும்; உலக வசதிகளைப் பெருக்கிக்கொண்டு சுகபோகத்தில் திளைக்க வேண்டும் என்றெல்லாம் கனவு கண்டாள். தனது விருப்பப்படி ஆடம்பரச் செலவுகளுக்குப் போதுமான பணம் இல்லாத நிலையில், அதிகமாகப்பணம் சம்பாதிக்கும்படி கணவனை அவள் தொந்தரவு செய்து வந்தாள்.

கணவன், ''நமது எளிய உணவுக்கும் உடைக்கும் போதுமான செல்வத்தை ஆண்டவன் தந்திருக்கிறான். இதற்கு மேலும் ஆசைப்படாதே'' என்று மனைவியிடம் நயமாக எடுத்துச் சொன்னான். ஆனால் அவன் சொன்னது எதையுமே அவள் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. அவள் தான் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தாள். அவளுடைய நச்சரிப்புப் பிராம்மணனுக்கு நரக வேதனையைத் தந்தது.

ஒரு சமயம் பிராம்மணன் வாழ்ந்து வந்த ஊருக்கு ஒரு சன்னியாசி வந்து தங்கினார். மக்கள் திரள்திரளாகச் சென்று அவரைத் தரிசித்தார்கள். அவரிடம் அற்புதங்கள் நிகழ்த்தும் பல சித்திகள் இருப்பதாக ஊரில் செய்தி பரவியது.

பிராம்மணனின் மனைவி, ''நம் ஊருக்கு வந்துள்ள சாதுவைப்பற்றி மக்கள் பிரமாதமாகப் பேசிக்கொள்கிறார்கள். அவரிடம் பல யோகசக்திகள் இருக்கின்றனவாம். நீங்கள் சென்று அவரிடம் நமது வறுமை நீங்க ஏதாவது வழி செய்யும்படி கேளுங்கள்'' என்று கணவனை அரித்துக்கொண்டிருந்தாள்.

பிராம்மணன் தயக்கத்துடன், ''நான் சாதுவிடம் பணத்திற்கு வழி செய்யுங்கள் என்று எப்படிக் கேட்க முடியும்? விவேகம், வைராக்கியம், பக்தி, ஞானம் ஆகிய தெய்விகப் பண்புகளைப் பெற ஆசீர்வதிக்கும்படி ஒரு சாதுவைக் கேட்பதுதான் நியாயமானது, முறையானது. அவரிடம் சென்று லௌகிக விஷயங்களைப்பற்றிப் பேசுவதும் உலக ஆசைகளை நிறைவேற்றும்படி கேட்பதும் ஒருசிறிதும் பொருத்தமற்றது'' என்று இதமாக எடுத்துச் சொன்னான்.

ஆனால் பிராம்மணனின் அறிவுரை எதையும் அவன் மனைவி பொருட்படுத்தத் தயாராக இல்லை. பண ஆசை என்னும் பைத்தியம் பிடித்துவிட்ட அவள், ''சாதுவிடம் சென்று நான் சொன்னதை அப்படியே சொல்லுங்கள்'' என்று பிராம்மணனை விரட்டு விரட்டு என்று விரட்டினாள். அடம்பிடிக்கும் மனைவியைச் சமாதானப்படுத்த வேறு வழியற்ற நிலையில், பிராம்மணன் தன்மானத்தைத் துறந்து வேண்டாவெறுப்பாகச் சாதுவின் இருப்பிடத்திற்குச் சென்றான்.

சாதுவின் முன்னிலையில் அவன் மௌனமாக உட்கார்ந்தான். மனைவி சொன்னதைச் சாதுவிடம் தெரிவிக்கவே அவன் மனம் கூசியது. தயக்கத்துடன் நீண்ட நேரம் அவன் அங்கேயே அமர்ந்திருந்தான். இறுதியில் சாதுவே அவனிடம் பேசினார்:

''அன்பனே! உன் மனதில் எதையோ வைத்துக் கொண்டு குழம்பிக்கொண்டு இருக்கிறுய். ஏதாவது சந்தேகம் இருந்தால் கேள்.''

பிராம்மணன், ''சுவாமி, தாங்கள் யோகசக்தி வாய்ந்தவர் என்றும், அதன்மூலம் பல அற்புதங் களைச் செய்யக்கூடியவர் என்றும் என் மனைவி கூறு கிருள். நாங்கள் ஏழைகள். தொட்டதை எல்லாம் தங்கமாக மாற்றும் மாயக் கல் கிடைத்தால் எங்கள் வறுமை நீர்ந்து செல்வத்தில் கொழிக்கலாம் என்று என் மனைவி நினைக்கிருள். அப்படிப்பட்ட ஒரு மாயக் கல் எங்களுக்குக் கிடைக்க வகை செய் யுங்கள். என் மனைவியின் வற்புறுத்தலின் பேரில் அத்தகைய மாயக் கல்லைத் தங்களிடமிருந்து பெற்றுப்போகவே இங்கு வந்தேன்'' என்று துறவி யிடம் வெட்கத்துடன் தெரிவித்தான்.

பிராம்மணன் சொன்னதைக் கேட்ட சாது, ''ஓ! இதுதானு விஷயம்? நீ சொல்வதைப் போன்ற மாயக் கல்லை நேற்றுத்தான் ஊர்க்கோடியில் உள்ள சாக் கடையில் வீசி எறிந்தேன். நீ வேண்டுமானுல் அதை அந்தச் சாக்கடையில் தேடிப் பார்த்துக் கொள்ளேன்'' என்று சர்வசாதாரணமாகக் கூறினர்.

பிராம்மணன் சாது குறிப்பிட்ட சாக்கடை இருந்த இடத்திற்கு அவசர அவசரமாக விரைந்தான். சிறிது நேரம் சாக்கடையில் அங்கும் இங்கும் தேடிய வுடனே முக்கோண வடிவில் பிரகாசம் பொருந்திய ஒரு கல் கிடைத்தது. பிராம்மணன் அதுதான் சாது குறிப்பிட்ட மாயக் கல்லாக இருக்கும் என்று ஊகித்தான். அந்த மாயக் கல்லினுல் பக்கத்தி லிருந்த ஒரு சிறிய கல்லை எடுத்துத் தொட்டுப் பார்த்தான். உடனே அது தங்கமாக மாறியது.

பிறகு மாயக் கல்லுடன் அந்த மகானின் எதிரில் சென்று அமர்ந்தான். அவரிடம், ''சுவாமி! தொட் டதை எல்லாம் தங்கமாக மாற்றுகிற விலை மதிப் பிடவே இயலாத இந்தக் கல்லையே நீங்கள் அற்ப மாகக் கருதிச் சாக்கடையில் வீசியெறிந்திருக்கிறீர் களே! அற்பம் என்று கருதி இதையே நீங்கள் வீசி யெறிந்திருப்பதால், இதைக்காட்டிலும் மிகவும் உயர்ந்த ஒரு பொருள் உங்களிடம் இருக்கவேண்டும் என்று நான் ஊகிக்கிறேன். இந்த மாயக் கல்லையும் விட உயர்ந்ததாக அப்படி உங்களிடம் இருக்கும் பொருள் என்ன என்று நான் தெரிந்துகொள்ள லாமா? அதைத் தாங்கள் எனக்குத் தர இயலுமா?'' என்று கேட்டான்.

சாது அவனிடம், ''அன்பனே! நீ நினைப்பது உண்மைதான். இந்த மாயக் கல்லையும்விடப் பல ஆயிரம் மடங்கு உயர்ந்ததாக, ஆண்டவனின் திரு நாமம் என்னும் மிக மிக உயர்ந்த ஒரு பொருள் என்னிடம் இருக்கத்தான் செய்கிறது. இதை மிகுந்த மனநிறைவுடன் உனக்குத் தரவும் தயாராக இருக் கிறேன். ஆனுல் அதைப் பெறுவதற்கு உரிய போதுமான பரிபக்குவத்தை உன் மனைவி இன்னும் அடையவில்லை. அவள் லௌகிக ஆசைகளின் இருப்பிடமாக இருக்கிருள். அவளிடம் சென்று இந்த மாயக் கல்லைக் கொடுத்துவிட்டுப் பிறகு நீ என்னிடம் வரலாம். இந்த மாயக் கல்லைவிட எல்லா விதத்திலுமே உயர்ந்ததான ஆண்டவனின் திருநாமத்தை உனக்கு மகிழ்ச்சியுடன் தருகிறேன்'' என்று தெரிவித்தார்.

அவன் உலக மக்களால் பெரிதும் மதிக்கப்படும் செல்வங்களை எல்லாம் தரக்கூடிய மாயக்கல்லைவிட வும் உயர்ந்ததும் ஒப்பற்றதுமாகிய உயர்வற உயர்ந்த பொருளாகிய ஆண்டவனின் திருநாமத்தை அந்த மகானிடம் பெற முடிவு செய்தான்.

துறவியின் யோசனைப்படி பிராம்மணன் மாயக் கல்லை மனைவியிடம் கொடுத்துவிட்டுத் திரும்பினுன். அவன் வீடுவாசல்களையும் மனைவியையும் துறந்த வனுகச் சாதுவிடம் வந்திருந்தான். தம் முன்னுல் வந்து நின்ற பிராம்மணனுக்கு அந்தச் சாது, லௌகிக இன்பங்களையும் செல்வங்களையும்விட ஆண்டவனின் நாமம் எவ்வளவு மகிமை வாய்ந்தது என்பதை விளக்கினர். பிறகு அவனுக்கு ஆண்ட வனின் திருநாமத்தைத் தந்து அருள்புரிந்தார்.

பிராம்மணன் சாதுவிடமிருந்து பெற்ற திரு நாமத்தைச் சதா சர்வகாலமும் ஆர்வத்துடன் ஜபித்து வந்தான். அது காரணமாக அவனுக்கு ஆண்டவனின் தரிசனம் கிடைத்தது. முடிவில் அவன் அச்சங்களுக்கும் அல்லல்களுக்கும் பந்தங் களுக்கும் காரணமான பிறவிச் சுழலிலிருந்து அறவே விடுபட்டான். கடலை அடையும் நதி போல ஆண்ட வனிடம் இரண்டறக் கலக்கும் முக்திநிலையைப் பெற்றுன்.

# அம்பிகை அருள் புரியும் முறை

வேலவனர்

### கற்பகத் தரு

அச்சமும் ஐயப்பாடுகளும் ஒருவன் செய்த பாவங்களின் பயனுகவே விளைகின்றன என்பது, தத்துவ நூல்களின் சாரம். அம்பிகை அந்தப் பாவங்களைப் போக்கி, நம் உள்ளத்தைப் பக்குவப்படுத்துகிருள். இவ்வாறு பக்குவப்படுத்தும் சக்தி, கற்பகத் தருவுக்குக் கிடையாது. ஆகவேதான் அம்பிகையைக் கற்பகத் தருவோடு ஒப்பிட்டுப் பேசுவது அவ்வளவு சரியல்ல என்பது சான்ளேர் கருத்து.

கற்பகத் தரு நாம் எதைக் கேட்டாலும் கொடுக்கும். அப்படிக் கொடுப்பதனுல் நமக்கு நன்மை ஏற்படுமா, தீமை ஏற்படுமா என்பது அதற்குத் தெரியாது. ஏனென்ருல், அது அறிவற்ற ஜடப் பொருள். ஆனுல் அம்பிகை அப்படி அல்லள். அவள் சித்ரூபிணி; நமக்கு நன்மை பயப்பது எது, தீமை பயப்பது எது என்பது நம்மை விட அவளுக்கே நன்ருகத் தெரியும். ஆகையால் நம்முடைய அறியாமை காரணமாக நாம் விரும்பிக் கேட்டாலும் நமக்குக் கேடு விளைவிக்கக் கூடிய எதையுமே அவள் தரமாட்டாள். அவள் எது தந்தாலும் அது நமக்கு முழுக்க முழுக்க நன்மை அளிக்கக் கூடியதாகவே அமையும் என்பது ஆன்ளேர் துணிவு. இந்த உண்மையுணர்வோடு அணுகும்போதுதான் அவளை நாம் பரிபூர்ணமாகச் சரணடைந்தவர்கள் ஆகிறேம்.

### அம்பிகையின் அருள்

சுருக்கமாகச் சொன்னுல் அன்னை பராசக்தியின் திருவடிகளை நாம் தஞ்சம் என்று அடையும்போது, முதலில் அவள் நம் பாவங்களை நீக்கி நமக்கு உள்ள அச்சங்களையும் ஐயப்பாடுகளையும் அகற்றுகிருள். அவ்வாறு பக்குவப்படுத்தப்பட்ட நிலையில், நம்முடைய உள்ளத்தில் சுபமான, மங்களகரமான எண்ணங்களே உதயமாகின்றன. அப்படிப்பட்ட எண்ணங்களையும் ஆசைகளையும் அவள் இனிதே நிறைவேற்றி வைக்கிருள். அதனுல்தான், பெற்ற தாயினும் உற்ற தாயாக உயிர்க்குலம் அவளை வழிபட்டு வாழ்த்துகிறது.

அம்பிகையை நாம் சரணடைவதால் அவளுக்கு ஒன்றும் லாபமில்லை. நமக்குத்தான் அளவிடற்கரிய நன்மைகளும் மேன்மைகளும் அதனுல் ஏற்படுகின்றன. அவள் பக்திக்கு வசப்படுகிறவள். பக்தி என்ற வலையை விரித்தால் அவள் அதில் வலிய வந்து சிக்கிக் கொள்வாளாம். 'பக்தி வலையில் படுவோன் காண்க' என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு. சரணுகதியைவிடச் சிறந்த பக்தி எதுவுமே கிடையாது. சரணுகதியின் மூலம் நாம் அவளுக்கு அடிமையாகிற அதே நேரத்தில் அவள் நமக்கு வசமாகிவிடுகிருள். பக்தர்களுக்கு அவள் தன்னையே தந்துவிடுகிருள். அதைக்காட்டிலும் நாம் அடையக்கூடிய பெரிய பேறு வேறு என்ன இருக்கிறது?

மங்களமே தன் வடிவமாக விளங்குபவள் பரதேவதை. தன் பக்தர்களுக்கு எல்லாச் சௌபாக்கியங்களையும் அவள் வாரி வாரி வழங்குகிருள். அது மட்டுமல்ல, காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம், அகந்தை, மமதை போன்ற உயிர்க் குற்றங்கள் அனைத்திலிருந்தும் அவள் நமக்கு விடுதலை அளிக்கிருள். அவளை வழிபடுபவர்களுக்கு உடனடியாகக் கிடைக்கிற முதற் பரிசு மனச்சாந்தியே ஆகும். அந்தச் சாந்தியின் முதிர்ச்சி நிலையில் மனிதனே தேவனுக மாறிவிடுகிருன் என்பது வேதாந்த நூல்களின் துணிபு.

### தவம் என்ருல் என்ன?



உலகம் படைக்கப்படுவது எதற்காக? உயிர்கள் தம்மைச் சூழ்ந்துள்ள பந்தங்களிலிருந்து விடுபட்டுத் தம்முடைய ஜீவ பாவத்தை ஒழித்துச் சிவஸ்வரூபத்தை அடைவதற்கான சரியை, கிரியை யோகம், ஞானம் அல்லது பிரத்யாஹாரம், தாரணை, தியானம், நிஷ்டை போன்ற முயற்சிகளில் ஈடுபடுவதற்கான வாய்ப்பு அளிக்கப் பட வேண்டும் என்பதற்காகவே உலகம் படைக்கப்படுகிறது என்பது, நமது சமய-தத்துவ நூல்களின் துணிபு. இத்தகைய முயற்சிகளில் உயிர்கள் ஈடுபட வேண்டுமானுல் அதற்கும் அந்தப் பராம்பிகைதான்

வழிகாட்டியாக வேண்டும். அதாவது உயிர்கள் தம் சிற்றின்ப வேட்கையிலிருந்து விடுபட்டுப் பரகதியை நோக்கி முயல வேண்டுமானால், முதலில் அவள் தன் கணவரை விட்டு விலகித் தவம் செய்ய வேண்டும். அவள் அப்படித் தவம் செய்யாவிட்டால், உலகில் எந்த ஒரு முனிவரோ பக்தரோ இறைவனிடம் தம் சித்தத்தைச் செலுத்தமாட்டார்கள். எனவே, பக்குவப்பட்ட உயிர்களை ஆத்மசாதனைகளில் ஈடுபடுத்துவதற்காகவே, இறைவி தவம் செய்கிறாள் என்பது ஆகமங்களின் துணிபு.

இனி, தவம் என்றால் என்ன என்பதை நாம் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். 'உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு' என்கிறார் திருவள்ளுவர். அதாவது, வருகிற துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதல், அதே சமயத்தில் பிற உயிர்களுக்கு மனதாலும் துன்பம் இழைக்காமல் இருத்தல்-இதுவே தவத்தின் இலக்கணம். இதனையே 'ஸஹநம் ஸர்வ து:காநாம் அப்ரதிகாரபூர்வகம்' என்கிறது ஆதி சங்கரரின் விவேகசூடாமணி. ஒரு துன்பம் வருமாயின் அதனைத் தடுத்துக் கொள்வதற்கான அல்லது போக்கிக் கொள்வதற்கான எந்த முயற்சியும் செய்யாமல், அதை அப்படியே ஏற்றுச் சகித்துக்கொள்வது என்பது அதன் பொருள்.

இந்த வாக்கியங்களின் சாரம் என்ன? துன்பம் வேறு, தவம் வேறு அல்ல. துன்பத்தை மனமுவந்து ஏற்றுக்கொள்வதே தவம் எனப்படுவது. அந்தத் தவத்தினால் நாம் அடையக்கூடிய பயன்கள் யாவை என்பதையும் வள்ளுவர்பெருமான் அழகாகக் கூறியிருக்கிறார்.

**துன்பங்கள் நம்மை வாழ்விக்க வருகின்றன**

ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணில் தவத்தான் வரும்.

நமது பகைவர்களை வீழ்விப்பதற்கும் அன்பர்களை வாழ்விப்பதற்குமான பேராற்றல்கள் தவத்தினால் ஏற்படுகின்றனவாம்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

தவத்தினால் தம்முடைய ஆன்மபலத்தைப் பெருக்கிக்கொண்டவர்கள், மரணத்தையும் வென்று விடுவார்களாம்.

அது மட்டுமல்ல, வாழ்வில் வறுமை படைத்தவர் மிகவும் அதிகமாகவும், செல்வம் படைத்தவர் மிகக் குறைவாகவும் காணப்படுவதற்குக் காரணம் என்ன? வேறொன்றுமில்லை. உலகிலே தவம் செய்யாதவர்கள்தாம் மிகப் பெரும்பாலோர் இருக்கிறார்கள். அதனாலேயே வறியவர்களும் மிகப் பெரும்பாலோராக இருக்கிறார்கள். தவம் செய்பவர்கள் மிகவும் குறைவாக இருப்பதனால்தான் செல்வர்களும் மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே காணப்படுகிறார்கள் என்கிறது திருக்குறள். தவத்தின் வாயிலாகவே ஒருவன் செல்வத்தைப் பெற முடியும் என்பது இதன் கருத்து. 'மேலைத் தவத்தளவே ஆகுமாம் தான் பெற்ற செல்வம்' என்னும் ஔவையார் வாக்கு இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது.

நாமெல்லாரும் உண்மையிலேயே செல்வத்தில் வேட்கையுடையவர்களாய் இருந்தால், அதை அடைவதற்குத் தவம் செய்வதைப் போன்ற சிறப்பான வழி வேறு எதுவுமே கிடையாது. நமக்குச் செல்வத்திலே ஆசை இருக்கிறது. ஆனால் தவம் செய்வதற்கு நாம் மனம் இல்லாதவர்களாய் இருக்கிறோம். மனம் இருந்தாலும், அதற்கு உரிய வழி நமக்குத் தெரியவில்லை. அதனாலேயே வறுமையில் கிடந்து உழலுகிறோம்.

ஆனால், இறைவன் கருணாமூர்த்தி அல்லவா? நாம் பெரும் செல்வர்களாய், அதே சமயத்தில் மரணத்தையும் வெல்லக்கூடிய ஆன்மிக வலிமை படைத்தவர்களாய் விளங்க வேண்டும் என்று அவர் ஆசைப்படுகிறார். அதற்காகவே அவர் நமக்குப் பலவேறு வகையான துன்பங்களைத் தருகிறார்.

அந்தத் துன்பங்களிலிருந்து தப்புவதற்கு நாம் என்ன என்னவோ முயற்சிகளைச் செய்கிறோம். சில சமயங்களில் அவற்றில் வெற்றியும் பெறுகிறோம். ஆனால் எவ்வகையிலும் தவிர்க்க முடியாத சில துன்பங்கள் வரும்போது அவற்றை நாம் சகித்துக் கொண்டால், அதுவே நாம் செய்யும் தவமாக ஆகிவிடுகிறது. அந்த அளவுக்கு நம்முடைய ஆன்மிக வலிமையும் பெருகுகிறது.

எனவே, துன்பங்கள் நம்மைக் கெடுப்பதற்காக வருபவை அல்ல; நம்மை வாழ்விப்பதற்காகவே வருகின்றன. துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெருகப் பெருக, நமது தவ வலிமையும் பெருகுகிறது. அந்த ஆற்றலை நமக்கு

அருளுவதற்காகவே, அன்னை பரதேவதை அருந் தவம் புரிகிருள்.

### மனிதன் செய்ய வேண்டிய முயற்சி யாது?

பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் இந்த மூவருக்கும் மேலான சிவபரம்பொருளாகவே தன்னை ஆக்கிக் கொள்ள ஆசைப்படுகிற மனிதன், அதற்கு முதற் படியாக இவ்வுலகியல் இன்பங்களிலுள்ள ஆசை களை விட்டொழிக்க வேண்டும் என்பது உபநிடதங் களின் முடிவு.

ஆனல், உலகியல் இன்பங்களின் மீதுள்ள ஆசையை விட்டொழிப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. மனிதன் குதிரையை அடக்கலாம், யானையை அடக்கலாம், கரடியை அடக்கலாம், புலியை அடக்கலாம், சிங்கத்தை அடக்கலாம். ஆனல் அவன் தன் மனதை அடக்குவது இவை எல்லாவற்றையும்விட மிகவும் அரிதான காரியம் என்கிருர் தாயுமானவர்.

திக்கெட்டிலும் சென்று பல நாடுகளை வென்று அடக்கிய மாமன்னர்களைப் பற்றி நாம் உலக வரலாற்றிலே படித்திருக்கிறோம். ஆனல், அவர் களுங்கூடத் தம் மனதை அடக்கியவர்கள் அல்லர். காரணம், ஆசையிலிருந்து விடுபட்டால் அல்லாது, மனம் அடங்கமாட்டாது. அவ்வாருயின் அந்த ஆசைகளை விட்டொழிப்பது எவ்வளவு பெரிய செயற்கருஞ் செயல் என்பதை எண்ணிப் பாருங்கள்.

உலகியல் இன்பங்களின் மீதுள்ள ஆசைகளி லிருந்து விடுபட்ட நிலையே வீடு எனப்படுவது. வட மொழியில் இதனை முக்தி என்றும் மோட்சம் என்றும் சொல்வார்கள். இந்த மோட்சம் ஒருவன் இறந்த பிறகுதான் அவனுக்குச் சித்திக்க முடியும் என்று பலர் நினைக்கிருர்கள். இது தவருன கருத்து. இந்தப் பிறவியிலேயே, நாம் உயிரோடு இருக்கும் போதே, இப்போதே நாம் அந்த முக்தியைப் பெற லாம். அப்படிப் பெற்றவர்கள்தாம் ஜீவன்முக்தர் எனப்படுவோர்.

தானும் ஜீவன்முக்தன் ஆகவேண்டும் என்ற மிகப் பெரிய குறிக்கொள் ஒருவனுக்கு இருக்கு மாயின், அதற்கும் அவன் ஸ்ரீபராம்பிகையின் துணையைத்தான் நாட வேண்டியிருக்கிறது. அப்படி நாடினவர்களுக்கு உலகியல் ஆசைகளி லிருந்து விடுபடுவதாகிய வீடுபேற்றினை அவள் விரும்பி அளிக்கிருள். அவளுடைய துணை இல்லா மல் தன் சொந்த முயற்சியினுலேயே ஒருவன் ஆசைகளை விட்டொழிக்க முற்படுவது, கொந் தளிக்கிற பெருங்கடலை ஒரு மரக்கலத்தின் துணை யின்றி வெறும் கைகளால் நீந்திக் கடப்பதற்கு முயல்வதைப் போன்ற துர்லபமான காரியமே ஆகும்.

### ஸ்ரீவித்யா தந்திரங்களின் சாரம்

அகில புவனங்களில் உள்ள அனைத்து உயிர் களுக்கும் ஒரே அன்னையாய் விளங்குபவள், பராசக்தியாகிய ஸ்ரீகாமாட்சி தேவியே ஆவாள். அதனுலேயே மற்ற உலகியல் மாதாக்களினின்றும் வேறு பிரித்து அறிவதற்காக அவளை 'ஸ்ரீமாதா' என்று குறிப்பிடுகிறது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்.

சரஸ்வதி என்ற சக்தியின் துணைகொண்டு பிரம்மா உலகத்தைப் படைக்கிருர். இலக்குமி என்ற சக்தியின் துணைகொண்டு திருமால் உலகத் தைக் காக்கிருர். ருத்திராணி என்ற சக்தியின் துணைகொண்டு ருத்திரன் உலகத்தை அழிக்கிருர். இந்த மூன்று சக்திகளாகவும் விளங்குபவள் உண் மையில் பராசக்தியே ஆவாள். இதைக் கருத்தில் கொண்டே, மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில், 'தனிமுதல்யாம் என்பார்க்கு அம்மனையாய் அவர்தம்மனை ஆனவள்' என்று பரதேவதையைப் போற்றுகிருர் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள்.

நிர்க்குண பரசிவமாகிய காமேசுவரனைத் தன் பதியாகப் பெற்றதனுல் ஸ்ரீலலிதாம்பிகைக்குக் காமேசுவரி எனப் பெயர் வந்தது. இந்தக் காமேசுவரன் வேறு, கைலாசபதியாகிய பரமேசுவரன் வேறு என்பதை நாம் இங்கே நினைவு படுத்திக்கொள்ள வேண்டும்.

எப்படி என்ருல், பரமேசுவரன் தம் கையிலே மான், மழு, உடுக்கை, சூலம் இவற்றைத் தரித்தவர். ஆனல் காமேசுவரனுடைய திருக்கரங்களில் இவற் றில் எதுவுமே கிடையாது. அவர் தம் பத்தினியான லலிதாம்பிகையைப் போலவே பாசம், அங்குசம், கரும்பு வில், புஷ்பபாணங்கள் ஆகிய ஆயுதங் களைத் தரித்தவர்.

கைலாசபதியாகிய பரமேசுவரன் இடையில் புலித் தோல் உடுத்தவர்; யானைத் தோலைப் போர்த்தவர். ஆனல் காமேசுவரனுக்கு இவையெல்லாம் இல்லை. அவர் திருமாலைப் போலவே பொன்னுடை புனைந் தவர்.

பரமேசுவரன் நாகங்களை மாலைகளாகவும் கங்கணமாகவும் குண்டலமாகவும் அணிந்தவர். ஆனல் காமேசுவரனுக்கு நாகாபரணம் இல்லை.

ஸ்வர்ணத்தினாலும் மாணிக்கங்களாலும் ஆன ஆபரணங்களையே அவர் அணிந்திருப்பார்.

பரமேசுவரன் விரித்த செஞ்சடையை உடையவர். ஆனால் காமேசுவரன் அப்படி அல்லர். அவர் மணிமகுடம் புனைந்த திருக்கோலத்தோடு விளங்குபவர்.

பரமேசுவரனுக்கும் காமேசுவரனுக்கும் இவை போன்ற பல வேறுபாடுகள் புராணங்களில் சொல்லப் பட்டுள்ளன.

எல்லாவற்றிலும் முக்கியமாக, ருத்திரன் என்ற முறையில் மகாப் பிரளய காலத்தில் பிரபஞ்சம் அனைத்தையும் அழித்து முடிப்பவர் பரமேசுவரன். ஆனால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலுக்கும் அப்பாற்பட்ட நிர்விசேஷப் பிரம்மமே காமேசுவரன் எனப்படுபவர். அந்தக் காமேசுவரன்தாம் சிருஷ்டி காலத்தில் பிரம்மாவாகவும், ஸ்திதி காலத்தில் விஷ்ணுவாகவும், சம்ஹார காலத்தில் ருத்திரனாகவும், திரோதான சமயத்தில் ஈசுவரனாகவும், அனுக்கிரக சமயத்தில் சதாசிவமாகவும் விளங்குகிறார். அப்போது பிரம்ம சக்தியான சரஸ்வதியாகவும், விஷ்ணுசக்தியான லக்ஷ்மியாகவும், ருத்திரசக்தியான பார்வதியாகவும், ஈசுவரசக்தியான ஈசுவரியாகவும், சதாசிவசக்தியான அநுக்கிரஹதை என்னும் திருவருளாகவும் ஸ்ரீகாமேசுவரியே விளங்குகிறாள். இந்தக் காமேசுவர காமேசுவரிகளின் திருவுளப் பாங்கின் படியேதான் புவனங்கள் அனைத்தையும் பிரம்மாவும் சரஸ்வதியும் படைக்கின்றனர். விஷ்ணுவும் லக்ஷ்மியும் காக்கின்றனர். பரமசிவன் எனப்படுகிற ருத்திரனும் பார்வதியும் அழிக்கின்றனர். ஈசுவரனும் ஈசுவரியும் மறைக்கின்றனர். சதாசிவனும் அனுக்கிரஹத்தையும் அருள்கின்றனர். ஸ்ரீவித்யா தந்திரங்களின் சாரமாக உள்ள இந்த அடிப்படை உண்மையை நாம் மறந்துவிடலாகாது. ★

---

திரு வேலவன் எழுதிய 'மாங்காடு ஸ்ரீ காமாட்சிமகிமை' என்னும் நூலிலிருந்து சில பகுதிகள் மேலே கட்டுரையாகத் தரப்பட்டுள்ளன.

**மாங்காடு ஸ்ரீ காமாட்சி மகிமை:** ஆசிரியர்: ஆசுகவி ஸ்ரீ வேலவனார், வெளியீட்டோர் அநுராகம், 54, பாண்டி பஜார், சென்னை - 600 017; பக்கங்கள் 72. விலை: ரூ. 2.

---




## மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை

[உரையாசிரியர்: ஆங்கிரஸ எஸ். வேங்கடேச சர்மா, கிடைக்குமிடம்: 5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு, மேல மாம்பலம், சென்னை-600 033; விலை: ரூ. 2]

சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச்செய்த தேவாரங்களான ஏழு திருமுறைகளும் இதுகாறும் யாவரும் எளிதில் உணரும் வகையில் உரை வகுக்கப்பெறவில்லை. இந்தக் குறையை நீக்கும் முயற்சி பாராட்டுதற்கு உரியது.

மூவர் முதலிகள் சென்று தரிசித்த திருத்தலங்களின் வரிசைப்படியே திருப்பதிகங்களையும் முறைப்படுத்தி இனிய அழகுதமிழில் பொருள்நயம் சிறக்க உரை வகுக்கப்பட்ட நூல்கள் 'மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை' என்ற தொடராக வெளியிடப்படுகிறது. இதுவரை வெளிவந்துள்ள நான்கு மாலைகள் மதிப்புக்கு வந்துள்ளன. ஒரு மாலையின் விலை ரூ. 2. மொத்தம் 108 மாலைகளில் (நூல்களில்) ஏழு திருமுறைகளும் உரையுடன் வெளியிடும் முயற்சியை இதன் உரையாசிரியர் மேற்கொண்டுள்ளார்.

இதுவரை வெளிவந்துள்ள நான்கு மாலைகளிலும் ஒவ்வொரு தலத்தின் பெருமையும் வரலாறும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. திருக்கோயில்கள், சிறப்பான நிகழ்ச்சிகள் நடந்த இடங்கள் ஆகியவற்றின் புகைப்படங்களும் வெளியிடப்பட்டுள்ளன. புராண வரலாறுகளும், பொருள் பொதிந்த சொற்களுக்குச் சிறந்த விளக்கமும் வரையப்பட்டுள்ளன. சுருங்கக் கூறின் இம் மாலைகளில் ஒவ்வொன்றுமே மூவர் முதலிகளுக்குச் சூட்டப்பெறும் அருள் விளக்க மாலை எனலாம். இறைவன் அடியார்களுக்கு அமுதம் போன்ற இம் மாலைகளின் உரையாசிரியர் திரு ஆங்கிரஸ வேங்கடேச சர்மா அனைவரின் பாராட்டிற்கும் உரியவர்.

அடுத்த மாலைகள் ஒவ்வொன்றாக வெளிவர இருக்கின்றன. இந்த ஞானத் தமிழ்ப் பணியினைத் தமிழறிந்த ஒவ்வொருவரும் குறிப்பாகச் சைவ சமயசீலர்கள் மனப்பூர்வமாக ஆதரிப்பார்கள்.

**பேராசிரியர் ப. இராமன், எம். ஏ.**

# நமது தாய்நாடு

சுவாமி விவேகானந்தர்



1

கண்டனம் செய்யும் சொல் எதையுமே சொல்ல வேண்டாம். உதடுகளை மூடிக்கொண்டு உங்கள் இதயங்களைத் திறந்து வையுங்கள். நீங்கள் ஒவ்வொருவரும் நாட்டின் சுமை முழுவதும் உங்களின் தோள்களின் மீதே சுமத்தப்பட்டிருப்பதாக எண்ணிக்கொண்டு, இந்த நாட்டின் கதிமோட்சத்திற்காகவும் உலகத்தின் கதிமோட்சத்திற்காகவும் பணியாற்றுங்கள். வேதாந்தத்தின் ஒளியையும் வாழ்க்கை முறைகளையும் வீட்டுக்கு வீடு எடுத்துச் செல்லுங்கள். ஒவ்வொருவரிடமும் மறைந்திருக்கும் தெய்விகத் தன்மையை அதன் மூலமாக வெளிப்படுத்துங்கள்.

2

உங்களுடைய நரம்புகளுக்கு முறுக்கேற்றுங்கள். நமக்குத் தேவை, இரும்பைப் போன்ற தசைகளும் எஃகைப் போன்ற நரம்புகளும்தாம். காலமெல்லாம் அழுதுகொண்டிருந்தது போதும். இனி அழுகை என்ற பேச்சே இருக்கக் கூடாது. சுய வலிமை பெற்ற மனிதர்களாக எழுந்து நில்லுங்கள்.

3

உறுதியுடன் இரு. அதற்கு மேலாகத் தூய்மையாகவும், முழு அளவில் சிரத்தை உள்ளவனாகவும் இரு. உன் விதியில் நீ நம்பிக்கை கொண்டிரு. அது, கையில் காசில்லாத உன்னை நம்பித்தான் இருக்கிறது. ஏழையாக இருக்கிறாய். ஆகவே நீ வேலை செய்வாய். உன்னிடம் எதுவுமே இல்லாத காரணத்தால் சிரத்தை உள்ளவனாக இருப்பாய். அவ்விதம் இருப்பதால் எல்லாவற்றையும் துறந்து விடுவதற்கும் நீ தயாராக இருப்பாய். இதைத்தான் நான் இப்போது உனக்குச் சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

4

என் குழந்தைகளே! இரக்கம் கொள்ளுங்கள். ஏழைகள், அறியாமையில் இருப்பவர்கள், நசுக்கப்பட்டவர்கள் ஆகியவர்களுக்காக இரக்கம் கொள்ளுங்கள். இதயமே நின்றுபோகும் வரையிலும் மூளை கொதித்துப் போகும் வரையிலும் இரக்கம் கொள்ளுங்கள். உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று நினையுங்கள். அதன் பிறகு கடவுளின் காலடிகளில் உங்கள் ஆன்மாவை அர்ப்பணியுங்கள். அப்போது உங்களுக்கு ஆற்றல் வந்து சேரும். உதவி வந்து சேரும். அசைக்கவே முடியாத உறுதியான வலிமை வந்து சேரும். போராட்டம்! போராட்டம்! இதுவே கடந்த பத்து ஆண்டுகளாக என் வாழ்க்கையின் இலட்சியமாக இருந்து வந்திருக்கிறது. இப்போதும் போராட்டம் என்றுதான் நான் சொல்லிக்கொண்டிருக்கிறேன். எங்கும் எல்லா இடத்திலும் இருள் சூழ்ந்திருக்கும் போதும் போராட்டம் என்றுதான் நான் சொல்வது வழக்கம். வெளிச்சம் வரும்போதும் போராட்டம் என்றுதான் நான் சொல்கிறேன். என் குழந்தைகளே! அஞ்ச வேண்டாம்.

5

கொழுந்துவிட்டெரியும் ஆர்வத்தை நாலா புறங்களிலும் பரப்புங்கள். செயலாற்றுங்கள்! செயலாற்றுங்கள்! வேலை செய்யும்போது ஒரு வேலைக்காரனைப் போலவே இருங்கள். சுயநலம் அற்றவர்களாக இருங்கள். ஒரு நண்பன் மற்றொருவரைத் தனிமையில் தூற்றுவதை ஒருபோதும் கேட்டுக்கொண்டிருக்காதீர்கள். எல்லையற்ற பொறுமையைக் கடைப்பிடியுங்கள். வெற்றி உங்களுடையதே. கவனமாக இருங்கள். உண்மை அல்லாதவைகளில் மிகவும் எச்சரிக்கையாக இருங்கள். உண்மையில் பிடிப்புள்ளவர்களாக இருங்கள். மெதுவாகவே என்றாலும் நிச்சயமாக நீங்கள் வெற்றி பெறப் போவது உறுதி. முழுவேலையும் உங்களையே பொறுத்திருப்பதாக நினைத்து, வேலையில் ஈடுபடுங்கள். ஐம்பது நூற்றாண்டுகள் உங்களை எதிர்நோக்கி இருக்கின்றன. எதிர்கால இந்தியா உங்களைப் பொறுத்தே அமையப்போகிறது. வேலை தொடரட்டும்.

6

இன்றைய இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள், நவீனத் தலைமுறையைச் சேர்ந்தவர்கள். ஆகிய உங்களிடம்தான் என் நம்பிக்கை இருக்கிறது. இவர்களிடமிருந்தே என் தொண்டர்கள் தோன்றுவார்கள். சிங்கங்களைப் போல அவர்கள் எல்லாப் பிரச்னைகளையும் தீர்த்து வைப்பார்கள். நான் என் கருத்தை வகுத்து அதற்காக என் வாழ்க்கையை அர்ப்பணித்திருக்கிறேன். இந்தியா முழுவதும் இந்தக் கருத்துக்கள் பரவும் வரையிலும், அவர்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அந்த அரிய கருத்துக்களைப் பரப்பிக்கொண்டே செல்வார்கள்.

7

தங்களுடைய தாய்நாட்டின் நன்மைக்காக எல்லாவற்றையும் துறக்கவும், தங்களுடைய உயிரைத் தியாகம் செய்யவும் கூடியவர்களான ஒரு சில இளைஞர்களே நமக்குத் தேவை. முதலில் அவர்களுடைய வாழ்க்கையை நாம் நல்ல முறையிலே உருவாக்க வேண்டும். அதன் பிறகுதான் ஏதாவது உண்மையாக முன்னேற்றத்தை எதிர்பார்க்கலாம்.

8

மற்றவர்களுக்காக நாம் மேற்கொள்ளும் மிகக் குறைந்த அளவு உழைப்பும் நமக்குள்ளே இருக்கும் சக்தியைத் தட்டி எழுப்புகிறது. மற்றவர்களுடைய நன்மையைக் குறித்துச் சிறிதளவு நினைப்பதுங் கூடச் சிங்கத்திற்குச் சமமான ஆற்றலை நமது இதயத்திற்குப் படிப்படியாகத் தருகிறது. நான் உங்களை எல்லாம் மிகவும் நேசிக்கிறேன். என்றாலும், நீங்கள் அனைவரும் பிறருக்காக உழைத்து உழைத்து அந்தப் பணியில் இறந்து போவதையே நான் விரும்புகிறேன். நீங்கள் அவ்விதம் இறந்து போனால் நான் மிகவும் மகிழ்வேன். எழுந்திருங்கள்! தேச முன்னேற்றம் என்னும் சக்கரத்தை நகர்த்துவதற்கு உங்கள் தோள்களைக் கொடுங்கள். இந்த வாழ்க்கை எவ்வளவு காலத்திற்கு நிலைத்திருக்கப்போகிறது? இந்த உலகத்திற்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள். உங்களுக்குப் பின்னால் நீங்கள் வாழ்ந்து மறைந்ததற்கு அறிகுறியாக எதையாவது விட்டுச் செல்லுங்கள். அப்படி இல்லாவிட்டால் இந்த மரம், கல் முதலியவற்றுக்கும் உங்களுக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது?

9

தன் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரையிலும் உள்ள நாடிநரம்புகளில் பாய்ந்து செல்லும் ஏராளமான ரஜோகுணத்தைப் பெற்ற ஒரு மாவீரன்- ஆன்மிக உண்மைகளை அறிய வேண்டும் என்னும் துணிவும், தேவைப்பட்டால் அதற்காகத் தன் உயிரையும் பணயம் வைக்கவும் தயாராக உள்ள வீரன் - தியாகத்தையே தன் கவசமாகவும் ஞானத்தையே தன் வாளாகவும் ஏந்திய ஒரு வீரன் - இத்தகைய ஒரு மாவீரனே இப்போது நமக்கு மிகவும் தேவைப்படுகிறான். வாழ்க்கையை இன்பம் அனுபவிக்கும் பூஞ்சோலையாக நினைத்து உருகி நிற்கும் காதலனின் மனநிலை நமக்குத் தேவையே இல்லை. மாறாக, வாழ்க்கை என்னும் போர்க்களத்தில் அஞ்சாது எதிர்த்து நிற்கும் வீரன் ஒருவனுடைய மனநிலையே நமக்கு இப்போது தேவை.

10

உங்களிடமே நீங்கள் நம்பிக்கை வையுங்கள். ஒரு காலத்தில் நீங்கள் வேதகாலத்தைச் சேர்ந்த ரிஷிகளாக இருந்தீர்கள். இப்போது நீங்கள் வேறு வித வடிவம் தாங்கி வந்திருக்கிறீர்கள். அவ்வளவு தான் விஷயம். உங்கள் அனைவரிடமும் எல்லையற்ற ஆற்றல் குடிகொண்டிருப்பதைப் பட்டப் பகல் வெளிச்சத்தைப் போல அவ்வளவு தெளிவாக நான் பார்க்கிறேன். ஆடைகளை வரிந்து கட்டிக்கொண்டு உங்கள் இதயத்தையும் ஆன்மாவையும் முழு அளவில் ஈடுபடுத்தி வேலைகளில் மும்முரமாக ஈடுபடுங்கள். நிலையில்லாத இந்தப் பொருளையும் புகழையும் வைத்துக்கொண்டு நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? நான் என்ன நினைக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா? முக்தி அல்லது இவை போன்றவற்றைக் குறித்து நான் பொருட்படுத்தவே இல்லை. உங்கள் அனைவருடைய உள்ளத்திலும் இத்தகைய எண்ணங்களை எழுப்பி விடுவதுதான் என் வாழ்க்கையின் குறிக்கோள். ஒரே ஒரு மனிதனுக்கு நல்வழியில் பயிற்சி அளிப்பதற்காக, நூறாயிரம் பிறவிகளை எடுப்பதற்கும் நான் தயாராக இருக்கிறேன்.

11

என் மகனே! மரணம் நேருவதைத் தடுப்பதற்கில்லை என்றால் கற்களைப் போலவும் கட்டைகளைப் போலவும் செத்து மடிவதைவிட வீரர்களைப் போல இறப்பது மேலானதல்லவா? நிலையில்லாத இந்த உலகிலே இரண்டொரு நாள் அதிகமாகவே வாழ்ந்துவிடுவதால் பெறப்போகிற பயன் என்ன? வாழ்க்கை என்னும் கத்தி துருப்பிடித்து அழிந்து போவதைவிடத் தேய்ந்து அழிவதே மேலானது. அதிலும் குறிப்பாக, மற்றவர்களுக்கு ஒரு சிறிதளவிற்கு நன்மை செய்வதற்காக அழிந்து போவது மிகவும் நல்லது. ★



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1979 மார்ச் மாத நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 13-3-79 | செவ்வாய் | ஸ்ரீசைதன்ய ஜயந்தி |
| 18-3-79 | ஞாயிறு | **ஸ்ரீ சைன்ய ஜயந்தி பொதுக் கூட்டம்**<br>தலைவர்: ஸ்வாமி கபீரானந்தர்<br>சொற்பொழிவாளர்: டாக்டர் என். விழிநாதன் |

**சத்சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 6-30 மணி வரை

4 மணி முதல் — ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (25-3-79)

4-30 மணி வரை — ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (4-3-79)

4-30 மணி முதல் 5-30 மணி வரை — சொற்பொழிவு (தமிழ்)

1. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்—திரு 'அண்ணா' சுப்பிரமணியம்
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

5-30 மணி முதல் — சொற்பொழிவு (ஆங்கிலம்)

6-30 மணி வரை

1. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்—ஸுவாமி தபஸ்யானந்தர்
2. ஸ்ரீமத் பகவத் கீதை—ஸுவாமி கபீரானந்தர்

வார நாட்களில் திங்கட்கிழமை முதல் வெள்ளிக்கிழமை வரையிலும் ஒவ்வொரு நாளும் மாலை 5-45 க்கு வழக்கம்போல் சொற்பொழிவுகள் நடைபெறும்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:** சனிக்கிழமைகளில் மாலை 5-45 மணிக்கு

1. ஸ்ரீமத் பாகவதம்—திரு பி. ராமகிருஷ்ணன் [3-3-79]
2. இராமாயணம்—டாக்டர் என். விழிநாதன் [24-3-79]

**விசேஷ தினங்கள்:**

5-3-79 ஞாயிறு : அந்தர் யோகம் (சாதனை தினம்)

18-3-79 ஞாயிறு : ஸ்ரீமத் ஸுவாமி யோகானந்தஜி ஜயந்தி

9-3-79 & 24-3-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு **ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.**

4-3-79 & 25-3-79 ஆகிய ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு **ஸ்ரீ சியாமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.**

**மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் நடத்தப்பெறும் வேறு சில நிகழ்ச்சிகள்.**

18-3-79 ஞாயிறு மாலை 5 30 மணிக்கு **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்**
இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்

9-3-79 வெள்ளி இரவு 7 மணிக்கு **ஸ்ரீமத் பகவத்கீதை**
இடம் : விவேகானந்த வித்யாலயம், அண்ணா நகர்

18-3-79 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு **ஸ்ரீமத் பகவத்கீதை**
இடம் : இல. 18, 9-வது லேன், சாஸ்திரி நகர்

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

தொலைபேசி: 71231

தலைவர்,
**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

